# கல்கி

KALKI 11.10.98
ரூ. 4.50



அடுத்த இதழ்

# சினிமா
# தீபாவளி சிறப்பிதழ்



ஒரு மாறுபட்ட
சினிமா
விருந்து

## ஜெயஸ்ரீராஜ்
எழுதும்

## ஹைர ஹைர ஹைரோப்பா!
– ஐரோப்பியப் பயணத் தொடர்

இது மட்டுமா?

மாயாபஜார் ரங்காராவே
வியக்கும்படியான

## உணவு ஸ்பெஷல்!

இலவச
இணைப்பு

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com     ஈ மெயில் : kalki@md2.vsnl.net.in

## நவராத்ரி ரிலீஸ்

அண்மையில் இரு ரிலீஸ்கள் பரபரப்பை ஏற்படுத்தின; முதலாவது அண்ணா ஹசாரே, இரண்டாவது அருண் காவ்லியுடையது. முன்னவர் சாட்டிய குற்றங்களை நிரூபிக்கத் தெரியாமல் உள்ளே சென்றார். பின்னவர் மீது சாட்டப்பட்ட குற்றங்களை போலீசார் நிரூபிக்கத் தெரியாமல், வெளியே விடப்பட்டார். அண்ணாவும் அவர் ஆதரவாளர்களும் உண்ணாவிரதத்தை மேற்கொண்டு ஆட்சியாளர்களைக் கலக்கினர். காவ்லியும் அவரது சகாக்களும் பூஜை, விரதம் என்று ஜெயிலிலேயே ஒரு கலக்குக் கலக்கி விட்டனர். அவரை 'ஐயோ பாவம்' என்று விடுதலை செய்தனர். இவரது விடுதலையை, பாவத்தால் ஒருநாளும் 'புண்ணியத்தை''க் கட்டிப் போட முடியாது என்பதாக சிஷ்யகோடிகள் சிலாகித்தனர். உண்மையில், காவ்லியின் விடுதலையை இரண்டு நாள் தள்ளிப் போட்டு, 'தசரா'வுடன் ஐக்கியப் படுத்தப் பார்த்தனராம். ...நல்லவேளை, அம்பிகை பிழைத்தாள்; சில நவராத்ரி மண்டல்கள் காவ்லி விடுதலையை வரவேற்று போஸ்டர் ஒட்டியதுடன் நின்றிருக்கின்றன. இல்லாவிட்டால், மஹிஷாசுரமர்த்தினி வடிவில் காவ்லியை அல்லவா மும்பைக்காரர்கள் வழிபட நேர்ந்திருக்கும்?

## மேகமே மேகமே...

'சீ போ' என்று விரட்டி அடிக்குமளவுக்கு மழை மும்பைக்காரர்களைப் படுத்தி எடுத்து விட்டது. வெங்காயம் கிலோ 40 ரூபாயில் அடம்பிடித்தது ஒருபுறமிருக்கட்டும்; ஒன்பது இரவுகளுக்கு, ஆர்கெஸ்ட்ராவுக்கு 25 லட்சத்தை வாரிக் கொடுத்துவிட்டு, ஸீஸன் டிக்கெட்டுகளை 1150 ரூ என்று போட்டு விட்டு 'ப்ளாக்'கில் 2000 ரூபாய்க்கு விற்கத் திட்டமிட்டு, 5–25 லட்சங்கள் வரை அனாயாசமாக 'ஸ்பான்ஸர் ஷிப்' என்ற பெயரில் வழங்கத் தயாரானவர்களை வளைத்துப் போட்டு, ஸ்பெஷல் கெஸ்டாக தலைகாட்டும் சினிமா நட்சத்திரங்களுடன் கைகுலுக்கி, வழிந்து, கேபிள் டீவியில் சிரித்து, கோலாட்டமடித்து, கோடி கோடியாகப் பணம் பண்ணுவதற்கென்றே வருடந்தோறும் நவராத்திரி உற்சவத்திற்கு காத்துக் கிடப்பவர்களின் நிலை என்னாவது? பெரிசுகளின் சாபமோ என்னவோ, மதியம் வரையில் பளிச்சென்று வெயிலடிக்கும். நான்கு மணியானால் எங்கிருந்தோ மழை மேகங்கள் இடி மின்னலுடன் திரண்டு வரும். ஆனால் அடாது மழை பெய்தாலும், விடாது களிப்பவர்களாயிற்றே குஜராத்தியர்? கொலாபாவில் சில சமர்த்துகள் 'ரெயின் பாண்டியா'வே ஏற்பாடு செய்து விட்டனர்! இயற்கை மழையில்லாவிட்டாலும், செயற்கை மழை பொழிந்தே தீரும்... ஹூம்... ராசக்ரீடைதான்!

## கேலி(ளி)க்கை வரி

டைட்டான ப்ளூ ஜீன்ஸில், ஆண் பிள்ளை போன்ற தோற்றத்துடன் சின்னக் கிராப்பை உலுப்பி, சிலுப்பி, ஸெலின் டியோனின் "மை ஹார்ட் வில் கோ..." வை இந்திப்படுத்தி, ரிதம், பீட்டுகளுடன் அமர்க்களப்படுத்திய ஃபால்குனி பதக்கின் வில்லிபார்லே நிகழ்ச்சியாகட்டும், ஜாலி ஜிம்கானாவில் தீபக் குமாருடைய 'கல்லு மாமா' பாடல்களாயிருக்கட்டும், முலுண்டின் எண்ணற்ற நவராத்திரி நிகழ்ச்சிகளாகட்டும்... கேலிக் கூத்துதான்! அம்மனைச் சுற்றி பக்திப் பரவசத்துடன் 'கர்பா' (கும்மி) ஆடிய காலம் போய், ஒரே "டொம் டொம்" என்ற சத்தமும், ஆரவாரமும் ஆர்ப்பாட்டமும்தான்! இம்முறை மணிகள் எல்லாம் வைத்துத் தைத்த உடையும், காஷ்மீரத்து குல்லா போன்ற ஹெட்ட்ரெஸ்ஸூம்தான் ஃபாஷன்! ஆண்கள் மஞ்சளில் குளித்தனர்; பெண்களுக்கு ஆரஞ்சு ப்ரீதி! இரண்டு கலர்களும் கண்களை உறுத்தின. சிறந்த பெண், ஆண், குழந்தை ஆர்டிஸ்ட்டுக்கும், சிறப்பான ஆடை அணிந்த ஆண், பெண் ஜோடிகளுக்கும் எக்கச்சக்க பரிசு மழை; போதாக்குறைக்கு டிக்கெட்டை வைத்துக் கொண்டு லக்கி டிப் வேறு! சென்ற முறை ஜுஹுவில் 35 லட்சம் செலவழித்த

ஜடேஜாவை மடக்கிப் போட்ட மஞ்சு வந்தி!

ஒரு நவராத்திரி மண்டல்காரர்கள் இம்முறை ஒரு கோடி செலவழித்திருக்கிறார்களென்றால்... இதில் '11:30 மணியுடன் முடித்து விடுகிறார்களே... விடிய விடிய ஆட வேண்டாமா? இது இந்துத்வ அரசுதானா' என்ற முணுமுணுப்பு வேறு! இந்தக் கேளிக் கூத்துக்கு 25% கேளிக்கை வரி விதித்தால் கூட,



• ஜடேஜா

• ஃபால்குனி பதக்



• மதுவந்தி

அரசுக்கு 3–5 கோடி எளிதாகக் கிடைக்குமே என்று சிலர் யோசனை சொல்லியிருப்பது நியாயமோ நியாயம்!

## ஜடேஜா எல்.பி. டபிள்யூவாமே?

சஹாரா கப் விஷயமெல்லாமில்லை; (வாழ்க்கை) சாசுர விஷயம்தான்; கொஞ்சம் கிரிக்கெட், கொஞ்சம் விளம்பரம், கொஞ்சம் கிளிகள் என்று ரீங்கரித்துக் கொண்டிருந்தவரை மயக்கி விட்டாராமே மதுவந்தி? சக்கைபோடு போட்ட 'மைனே ப்யார் கியா' கதாநாயகி பாக்யஸ்ரீயின் தங்கைதான் இந்த மதுவந்தி. கோவிந்தாவுடன் 'தோ ஆன்கேன் பாரா ஹார்த்' என்று ஏதோ ஒரு படத்தைப் பண்ணிவிட்டு படிக்கச் சென்று விட்டார். இப்போது இரண்டு கண்கள், இரண்டு கைகளாலும் தனக்கு வரும் சின்ன, பெரிய திரை வாய்ப்புகளை அள்ளிக் கொள்ளாமல், அஜய் ஜடேஜாவை கட்டிப் போடப் பார்க்கிறார். "இருவருமே ராயல் ஃபேமிலி. பொதுவான நண்பர்கள் மூலம் அறிமுகம்; அவரைப் பிடித்திருப்பது பெரிய கிரிக்கெட் ஸ்டார்(!) என்பதற்கு அல்ல; நல்ல உள்ளத்துக்குத்தான்" என்பவர் நிச்சயதார்த்தத்திற்குப் பிறகு அதிகமாய் வெளியிடுவதாக ஒப்புக் கொண்டிருக்கிறார். அதுவரை ஜடேஜாவைப் பற்றி வெளிவரும் காசனோவாத்தனங்களைக் கண்டுகொள்ளப் போவதில்லையாம்! நிச்சயதார்த்தத்தை ஜடேஜா எத்தனை நாட்கள் ஒத்திப் போடுவாரோ?

## சிறுதுளிகள்...

"சுத்தர் மும்பை"யை உருவாக்குவதற்கு BMCகாரர்கள் ரிடையர்டு பேர்வழிகளை நியமித்திருப்பது புத்திசாலித்தனமான சாமர்த்தியம்; எங்கே குப்பை கூளமிருக்கும், நியூசென்ஸ் பேர்வழிகள் இருப்பார்கள் என்பது அவர்களுக்கு அத்துபடியாயிற்றே! போர்விலியில் அண்மையில், ஒரு பெரிசு, இயற்கையின் அழைப்பை ஏற்றுக் கொண்டிருந்த ஓர் இளைஞனை லபக்கி, BMC ஆபீசர்களிடம் பிடித்துக் கொடுத்தார். உடனே 25 ரூபாய் ஃபைன் விதித்து, ரசீதும் கிழித்து விட்டார்கள். இந்தச் சிறு(நீர்) பிரச்னைக்கு இவ்வளவு கலாட்டாவா என்று திட்டிக் கொண்டே பணத்தையும் கொடுத்து, ரசீதையும் சுக்கு நூறாக்கிப் பெரியவரின் முகத்தில் எறிந்தார் இளைஞர். உடனே அடுத்த ரசீது கிழிக்கப்பட்டது; இன்னொரு ஃபைன்... பிறிதொரு 25 எதற்காக? இம்முறை பொது இடத்தில் குப்பை போட்டதற்காக. இளைஞன் கப்சிப்பானான்; இதனால் மும்பை பிரகாசிக்கப் போவதாக கனாக் காண முடியாதுதான். ஆனால் இதுபோல் அடிக்கடி நிகழ்ந்தால் சிறு துளி பெருவெள்ளமாகாதா என்ற நப்பாசைதான்.

— ஜெயஸ்ரீ ராஜ்

**மொத்தம் ஐந்து கேள்விகள். இவற்றை பேராயர் ம. ஆரோக்கியசாமி ஆண்டகை (தமிழக ஆயர் பேரவைத் தலைவர் மற்றும் திருவருட் பேரவைத் தலைவர்) அவர்களிடமும் ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல அடிகளார் (குன்றக்குடி ஆதீனகர்த்தர் மற்றும் திருவருட் பேரவைச் செயலர்) அவர்களிடமும் கேட்டோம்.**

***"ராமர் கோவில் கட்ட, வேலைகள் நடப்பதாகத் தகவல்கள் வருகின்றன. இதில் உங்கள் கோணம் என்ன?"***

பேராயர்: அயோத்தியில் சர்ச்சைக்குரிய

# கேள்வி ஒன்று!

இடத்தில் இராமர் கோவில் கட்டுவது சரியல்ல. வேறு எங்காவது கட்டினால் அது தவறு என்று சொல்வதற்கு இடமில்லை.

அயோத்தியில் ராமர் பிறந்தார், வாழ்ந்தார் என்று இந்துக்கள் நம்புகின்றனர். ஆனால் இருந்த மசூதியை இடித்துவிட்டு அங்கு கோயில் கட்டுவது நியாயமானதாகத் தென்படவில்லை.

பிறர்க்கு இழைத்த இழப்புக்கு ஈடு செய்வது நீதி. இருந்ததை இடித்துவிட்டு அதைக் கட்டிக் கொடுக்காமல் இருப்பது அநீதி. Might is right என்ற போக்கு சரியன்று. Whether might or not, right is right. ஒவ்வொருவருக்குரிய உரிமையைக் கொடுப்பதுதான் அறவாழ்வின் அடிப்படை.

**அடிகளார்:** இதனால் பிரச்னைகள் வரும்: மனிதர்களுக்குள் மோதல்கள் வரும் எனும்போது விட்டுக் கொடுத்தலே உயர்வான நிலை. இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்கலாம், தப்பில்லை.

கம்பன் வடித்த ராமன், கோவில் துறந்தவன்; அதாவது அரண்மனை துறந்தவன்; சுகபோகம், அதிகாரம் எதுவும் வேண்டாமெனக் கானகம் புகுந்தவன். தியாகத்தின் திருவுருவம் அவன். பல்லாயிரம் உயிர்களைப் பலி தந்து தனக்குக் கோவில் எழுப்புவதை அந்த ராமனே விரும்ப மாட்டான். ராமனுக்கு உகந்த கோவில் மனித மனம்தான். அவன் போதித்த அறநெறிப்படி வாழ்ந்து நம் மனதை அவனது கோவிலாக்குவதே சாலச் சிறந்தது.

*"சமீபகாலமாக போலி மத வாதிகள் நடமாட்டம் மிகுந்திருக்கிறது. இதற்கு*



• பேராயர்



• அடிகளார்

**அடிகளார்:** எல்லாத் துறைகளிலுமே போலிகள் உண்டு. இது உலகம் தோன்றிய நாள் முதலே உள்ள பிரச்னை. இதில் மக்களை அதிகம் குற்றம் கூற முடியாது. 'தேடுதல்' ஆர்வத்தில் மக்கள் போகிறார்கள். இந்தத் துறையில் நுழைபவர்கள்தான் தங்கள் காவி உடைக்கும், மக்கள் நம்பிக்கைக்கும் மதிப்புத் தந்து நல் வழியில் நடக்க வேண்டும்.

# பதில்களின் இரகசியம்!!

**''குங்குமம் வரவழைப்பது, லிங்கம் வரவழைப்பது, குருடர்களைப் பார்க்க வைப்பது, முடவர்களை நடக்க வைப்பது – என்று சிலர் ஆச்சரியங்கள் நிகழ்த்துவது குறித்து உங்கள் கருத்து?''**

பேராயர்: மந்திரவாதிகள் சிலர் எக்காலத்திலும் இருந்திருக்கின்றனர். இவர்கள் மக்களை எப்படி ஏமாற்றுகிறார்களோ தெரியவில்லை.

குங்குமம் வரவழைப்பது போன்ற அற்புதச் செயலில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஒருவேளை இது மறைந்திருக்கும் தீய ஆவியின் செயலாகவும் நடக்கலாம். பிறருக்குப் பயன்படாத செயல் கடவுளுடைய செயல் என்று சொல்ல முடியாது. இம்மாதிரியான அதிசய செயல்கள் மனிதனுக்குத் தேவையுமில்லை.

குருடர் பார்ப்பது, முடவர் நடப்பது போன்றவை பிறருக்கு நலம் பயக்கும் செயல்கள். இவை நடந்தன. குறிப்பாக, இயேசு குருடர் கண்ணைத் தொட்டுப் பார்வை அளித்தார். இயேசுவின் சீடர் பேதுரு, முடவனை நடக்க வைத்தார். இவ்வாறான அற்புதங்கள் கடவுளின் நம்பிக்கையால் மட்டுமே நடக்கலாம். நடந்தன.

இவை குறிப்பிட்ட ஒரு சிலர் நன்மைக்காக, குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் நடந்தன. இவை இன்று எங்கு பார்த்தாலும் நடந்து கொண்டிருக்கின்றன என்பதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. ஏதோ ஒரு சில

**'மதவாதிகளைக் குற்றம் கூறுவதா? மக்களைக் குற்றம் கூறுவதா?''**

பேராயர்: போலி மதவாதிகள் உள்ளது உண்மையே. என்னைப் பொறுத்த மட்டில் ஏமாறும் மக்களையும் குறை கூறுவேன். ஏமாற்றும் மதவாதிகளையும் குறை கூறுவேன்.

மனிதரிடம் ஏற்படும் குருட்டு நம்பிக்கையைப் பயன்படுத்திச் சில மதவாதிகள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உண்மையான சமயப்பற்று உள்ள மதவாதிகள் மக்களை அறிவார்ந்த நம்பிக்கைப் பாதையில் அழைத்துச் செல்வார்கள்: குருட்டாட்டத்தில் அழுத்திப் பணம் சம்பாதிக்க முயலமாட்டார்கள்.

சமயங்களில், மனிதர் நன்மைக்காக ஒரு சில அற்புதங்கள், கடவுள் வல்லமையால் நடக்கலாம்.

**அடிகளார்:** அது அல்ல ஆன்மிகம். தனி மனிதனையும் சமூகத்தையும் நேர் வழிப் படுத்தி மன அமைதியோடு வாழ வைப்பதே ஆன்மிகம். இதுபோல் குங்குமம் தருவது, பணக்காரன் ஆக்குகிறேன் என்பது, நோயைக் குணப்படுத்துவதாகக் கூறுவதெல்லாம் உண்மையான ஆன்மிகமல்ல. பொருளியல் உலகமே வாழ்க்கை அல்ல.

கண்ணால் காணும் புறச்சூழலைத் தவிர்த்து மனதில் அமைதியோடு வாழ்வதே வாழ்க்கை. இன்று நம்மைவிட, தெருவில் படுத்திருக்கும் துறவி அதிக அமைதியோடு காணப்படுவார். காரணம் அவருக்கு ஸ்தானம் ஏதுமில்லை. நிர்வாகம் ஏதுமில்லை. நமக்கு அந்தப் பொறுப்பு இருக்கும்போது அது குறித்த சிந்தனையும், கவலையும் தவிர்க்க முடியாது.

ஆக மன அமைதியே பிரதானம். அதை வழங்குவதே உண்மையான ஆன்மிகம். அதே போல் பிறருக்குத் தீங்கு விளைவிக்க முயற்சிப்பதும், சாபம் அளிப்பதும்கூட ஆன்மிகம் அல்ல.

***"நீங்கள் உங்கள் கடவுளை நம்பி, அவனே வாழ்க்கை என்று துறவறம் பூண்டவர். அதே நேரம் திருவருட் பேரவை மூலம் பிற சமயத் தலைவர்களோடு கை கோத்து நிற்கிறீர்கள். அப்படியானால் இயேசு, அல்லா, சிவன் மூவரையுமே நீங்கள் கடவுளாக ஏற்பதாகக் கொள்ளலாமா?"***

**பேராயர்:** எல்லாச் சமயங்களும் ஒன்றுதான். சமயங்களின் கொள்கைகளில் வேறுபாடு உண்டு; சடங்குமுறைகளில் வேறுபாடு உண்டு; வழிபாடுகளில் வேறுபாடுகள் உள்ளன.

இருப்பினும் ஒருவர் ஒருவரை மதித்து வாழ வேண்டும் என்பது எனது ஆழமான நம்பிக்கை. ஒரு சமயத்தார் மற்றொரு சமயத்தாரை விமர்சிப்பது கண்டிக்கத்தக்கது. அவரவர் நம்பிக்கைக்கு ஏற்றவாறு வாழ அவரவர்க்கு உரிமை உண்டு.

திரு அருள் பேரவை ஏற்படுத்தி மத நல்லிணக்கத்தை வளர்ப்பதால் நான் அல்லாவையும், சிவனையும் என் கடவுளாக ஏற்றுக் கொள்கிறேன் என்று கூற முடியாது. நான் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை முழுமையாக நம்பி, 'அவர் என்றும் இருக்கிறார், எனக்கு நிறை வாழ்வு அளிக்கிறார்' என்ற நம்பிக்கையில் வாழ்கிறவன். 'நான் உங்களை அன்பு செய்தது போல் நீங்களும் ஒருவர் ஒருவரை அன்பு செய்யுங்கள்' என்று அவர் கொடுத்த ஆழமான கட்டளையைச் செயல்படுத்த முயன்று கொண்டிருக்கிறேன். சமயங்களெல்லாம் குறிப்பிடும் ஒரே கடவுளை ஏற்றுக் கொள்கிறேன்.

**அடிகளார்:** கடவுள் என்பவனைக் கண்டறிந்தவர் யாருமில்லை. எல்லோருமே பரம் பொருள் என்ற ஒன்றினை நம்பி, விருப்பத்திற்கேற்பக் குறியீடுகளை ஏற்படுத்தி வழிபட்டு வருகிறோம். நாம் நம் சகமனிதனை ஏற்பதற்கும், அன்பு காட்டுவதற்கும் மதம் ஒரு தடையாக இருக்கக் கூடாது என்பதற்காக ஏற்படுத்தப்பட்டதே திருவருட்பேரவை. இதில் யாரும் தத்தம் நிலைகளை இழந்துவிடவில்லை.

பேராயர் சர்ச்சுக்குப் போய் வழிபடுவார். நாம் கோவிலுக்குச் சென்று வழிபடுவோம். அது அவரவர் வழி. ஆனால் வழி வேறு என்பதால் மனிதநேயம் பலியாகக் கூடாது என்பதே நம் நோக்கம்.

மண்டைக்காடு கலவரம் ஏற்பட்டபோது, மறைந்த குன்றக்குடி அடிகளாரும், அப்போதைய கோட்டார் ஆயர் ஆரோக்கியசாமியும் இணைந்து அமைதியை நிலைநாட்ட ஏற்படுத்திய அமைப்புதான் இது.

பிற மதச் சடங்குகளைக் கேலி செய்யாமலும், அவர்கள் வழிபாட்டிற்கு ஊறு செய்யாமலும் இருப்பது நம் நிலையை இழந்ததாக அமையாது.



**"போன வாரம் உன் கதை பிரசுரமாச்சே! அதுக்கு ஏதாவது கிடைச்சுதா?"**

**"ஓ! கதை நல்லா இல்லேன்னு வாசகர்களிடமிருந்து நிறைய திட்டு கிடைச்சுதே!"**

**— லலிதா செல்லப்பா**

"மதங்களே சமம்தான் என்ற நிலையில், ஒரே மதத்திற்குள், பாண்டி, முனியாண்டி, சரஸ்வதி, லட்சுமி என்றும் குழந்தை இயேசு, பூண்டி மாதா, வில்லியனூர் மாதா, வேளாங்கண்ணி மாதா, புனிதர்கள் வரிசை என்றும் தெய்வத்திற்குப் பல குறியீடுகள் எதற்கு?''

**பேராயர்:** கிறித்தவ மதத்தைப் பற்றி மட்டுமே இங்கு சொல்ல விரும்புகிறேன்.

நாங்கள் நம்பும் கடவுள் ஒருவரே. அவர் மூன்று ஆட்களாக, தந்தை, மகன், தூய ஆவியாக இருக்கின்றார். மகன் மனிதராகப் பிறந்தார். அவருடைய குழந்தைப் பருவத்தை மட்டும் நாங்கள் நினைத்துக் கொண்டாடும் பொழுது, அவரைக் குழந்தை இயேசு என அழைக்கின்றோம். அவர் மக்களின் பாவங்களை மன்னித்து மீட்கின்றார். அதை நினைத்து மீட்பர் என்கிறோம். அவர் பாவிகளைத் தேடிச் சென்று அவர்களைக் காப்பாற்றி, அவர்களுக்காக உயிரைக் கொடுக்கிறார் என்பதை நினைக்கும் பொழுது நல்ல ஆயர் என அழைக்கிறோம்.

மனித உடல் எடுத்த கடவுளுக்கு, மனிதர் அறிவுக்கும் ஐம்புலனுக்கும் உதவி புரியும் குறியீடுகள், பெயர்கள் கொடுப்பது தவறாகுமா?

கடவுளுக்கு ஏன் குறியீடுகள் என்று கேட்கிறீர்கள். எல்லையற்ற பண்புகள் கொண்ட இறைவனைப் பல்வேறு பெயர்களால் அழைப்பதும், மனித உடல் எடுத்த கடவுளுக்கு அதாவது இயேசுவுக்கு உருவம் வைப்பதும் தவறாகாது. குழந்தை இயேசுவாகவும், நல்ல ஆயனாகவும், அன்புள்ள திரு இருதயமாகவும் இயேசு சித்திரிக்கப்படுகிறார்.

**அடிகளார்:** ஒவ்வொரு மனிதனும் தான் வாழும் சூழல், தனக்கு ஏற்பட்ட அனுபவங்கள், தனக்குத் தோன்றும் சிந்தனை என்ற அடிப்படையில் தான் புதிய புதிய மார்க்கங்களையும், புதிய புதிய குறியீடுகளையும் வரையறை செய்கிறான். இது தவிர்க்க முடியாதது. சமயத்திற்கு எல்லைகள் கிடையாது. பரந்து விரிந்து கொண்டே போகும்.

இன்றைய சூழலில் தன்னையே கடவுள் என்று கூறுகிறவர்கள்கூட நிறைய வந்து விட்டார்கள். நீங்கள் கூறுகிற மாதிரி ஒரே கடவுள், ஒரே மதம் என்று அனைவரையும் நிர்ப்பந்திக்கிற போட்டா போட்டியில்தானே வன்முறை வெடிக்கிறது. இந்த நேரத்தில் ஒரு விஷயத்தைக் கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும். இவ்வளவு மதங்கள் இருந்தாலும் அவ்வப்போது வன்முறைகள் வெடித்தாலும் பெரும்பான்மையினரில் பெரும்பான்மையினரும் சரி, சிறுபான்மையினரில் பெரும்பான்மையினரும் சரி... மத நல்லிணக்கத்தையே விரும்புகிறார்கள். பாபர் மசூதி இடிக்கப்பட்டபோது பெரும்பான்மை மக்கள் எதிர்ப்பையே தெரிவித்தார்கள். கோவை குண்டு வெடிப்பின்போது கூட, ஒரு சிலரின் தவறு என்ற பார்வையில்தான் எல்லோரும் பார்த்தார்களே தவிர, எல்லா முஸ்லிம்களையும் குற்றவாளிகளாகப் பார்க்கவில்லை. நம் மக்களிடம் இன்றும் பெரும்பான்மையாக சகிப்புத் தன்மையும், மதச்சார்பின்மையும் நிலவி வருவது நம் தேசத்திற்கு மிகப் பெரிய பலம்!

சந்திப்பு, படங்கள்:
'கிரண்நியூஸ்' ப. சரவணன்

## வித்தியாசமாக உதவும் விஸ்வநாதன்!



மும்பையில் இருக்கும் விஸ்வநாதன் உதவி செய்யும் முறையே வித்தியாசமானது. இருதய அறுவை சிகிச்சை போன்ற மருத்துவச் செலவுகளுக்குப் பண உதவி கேட்டு வரும் எல்லா விளம்பரங்களுக்கும் இவர் உதவுகிறார்— பண உதவி அல்ல. இந்தியாவின் பல பகுதிகளிலும் இயங்கி வரும் பொது நல அறக்கட்டளைகளின் முகவரிகளை இவர் சேர்த்து வைத்திருக்கிறார். மருத்துவ உதவி கோரும் நோயாளிகளுக்கு அந்த அறக்கட்டளைகளின் முகவரிகளைத் தந்து உதவுகிறார். கூடவே மத்திய சுகாதாரத் துறை, பிரதமர் நிவாரண நிதி போன்றவற்றுக்கான விண்ணப்பப் படிவங்களையும் அனுப்பி வைக்கிறார். இவற்றோடு மருத்துவ உதவி கோருவதற்கு என்னென்ன வழிமுறைகளில் விண்ணப்பிக்க வேண்டும் என்பது போன்ற தகவல்களையும் அவர்களுக்குக் கொடுத்து உதவுகிறார்.

— கௌதம் ராம்

**சமீபத்தில் சத்துணவு மையங்களில் முட்டை சாப்பிட்ட சிறுவர், சிறுமிகள் வாந்தி - மயக்கத்தால் பாதிக்கப்பட்டார்கள் என்று செய்திகள் வந்தன அல்லவா! இந்த கெட்டுப் போன முட்டைகள் சத்துணவு மையங்களுக்கு விநியோகம் செய்யப்பட்டது ஏன்? இதைத் தவிர்க்க முடியாதா? சமூக நலத்துறை அமைச்சர் சற்குண பாண்டியனைச் சந்தித்துக் கேட்டோம்.**

# "சத்துணவு முட்டை இனி கெட்டுப் போகாது...!"

"முதலில் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். தர்மபுரி, தஞ்சை மாவட்டங்களில் குழந்தைகளுக்கு முட்டையால் பாதிப்பு ஏற்பட்ட உடனேயே முதல்வரின் ஆலோசனையின் பேரில் விரைவான நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஈரோடு, நாமக்கல் போன்ற இடங்களிலிருந்து விநியோகம் செய்யப்பட இருந்த முட்டைகள் முடக்கப்பட்டன. குழந்தைகளுக்கு மருத்துவமனைகளில் சிறப்பான சிகிச்சை அளிக்கப்பட்டது. முட்டைக் கிடங்குகளில் முட்டைகளோடு பழங்களும் சேர்த்து வைக்கப்பட்டிருந்ததால்தான் முட்டைகள் கெட்டு விட்டதாகச் சொல்லப்பட்டது.



"வருடம் ஒருமுறை மாவட்ட ரீதியாக சத்துணவு மையங்களுக்கு முட்டை விநியோகம் செய்ய டெண்டர் கோரப்படுகிறது. ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில், பதினைந்து நாட்களுக்கு ஒருமுறைதான் முட்டை கொடுக்கப்பட்டது. ஆனால் கலைஞர் ஆட்சியில் வாரம் ஒருமுறை முட்டை கொடுக்கப்படுகிறது. எட்டாவது வரை படிக்கும் 65 லட்சம் பள்ளிச் சிறுவர், சிறுமிகளுக்கும் இரண்டு முதல் ஐந்து வரை உள்ள 20 லட்சம் குழந்தைகளுக்கும் முட்டை வழங்கப்படுகிறது.

"முட்டைகள் விநியோகத்தை ஒழுங்குபடுத்த பல நடவடிக்கைகளை எடுக்க வழி சொல்லியிருக்கிறார் முதல்வர். கெட்டுப் போன முட்டைகளைச் சப்ளை செய்த நபர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த ஆர்டர் கேன்சல் செய்யப்பட்டது. சில மாவட்டங்களில், முட்டை விநியோகப் பொறுப்பை கோழி வளர்ச்சி நிறுவனம் எடுத்துக் கொண்டிருக்கிறது. இப்போது நாள்பட்ட முட்டைகளைக் குழந்தைகளுக்கு கொடுப்பதைத் தவிர்க்க, முட்டை மேல் கலர் ரப்பர் ஸ்டாம்ப் அடிக்கப்படுகிறது. முதல் வாரம் கொடுக்கப்படும் முட்டைகளுக்கு மேல் பச்சைக் கலர். அடுத்த வாரம் சிவப்பு என நான்கு வாரங்களுக்கு நான்கு கலர் ஸ்டாம்புகள். இதன் மூலம் முதல் வார முட்டைகளை இருப்பில் வைத்து, இரண்டாவது வாரம் விநியோகிக்க முடியாது. கண்காணிப்பு அலுவலர்களில் யாராவது ஒருவர் வாரா வாரம் சத்துணவு மையங்களுக்குத் திடீர் விசிட் செய்ய

வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது வாரம் விஸிட் செய்யும் போது பச்சை ஸ்டாம்ப் போட்ட முட்டை இருந்தால் சம்பந்தப்பட்டவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

"அடுத்ததாக சத்துணவு பொறுப்பாளர்கள் முட்டை வந்தவுடன் அவற்றை 'நல்லதா அழுகியதா' என்று எளிய முறையில் செக்கப் செய்யுமாறு அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள்.



• அமைச்சர் சற்குணபாண்டியன்

முட்டையைத் தண்ணீரில் போட்டவுடன் அது மூழ்கி விட்டால் நல்ல முட்டை; மிதந்தால் ஏதோ கோளாறு. இதுதான் அந்த எளிய முறை. மேலும் வேக வைத்துக் கொடுக்கும் போது மேல் ஓட்டை உறித்தெடுத்துக் கொடுக்க வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறோம். அப்படிச் செய்தால் முட்டை கெட்டுப் போயிருந்தாலும் சுலபமாகக் கண்டு பிடித்து விட முடியும்.

"இப்போது கொள்முதல் நிலையங்களிலிருந்து முட்டைகளை லட்சக் கணக்கில் வாங்கி கிட்டங்கிகளில் வைத்து, டெண்டர் எடுத்தவர்கள் சத்துணவு மையங்களுக்கு விநியோகம்

**"முட்டையைத் தண்ணீரில் போட்டவுடன் அது மூழ்கி விட்டால் நல்ல முட்டை; மிதந்தால் ஏதோ கோளாறு....**

செய்கிறார்கள். இதன் காரணமாக ஏற்படும் தாமதத்தால் கூட முட்டைகள் கெட்டுப் போகின்றன.

"இந்த வகை விநியோகத்தைத் தவிர்த்து, சத்துணவு மையப் பொறுப்பாளர்களே தங்கள் மையங்களின் தேவைக்கேற்ப உள்ளூரிலேயே வாங்கிக் கொள்ள அனுமதித்தால் என்ன என்ற யோசனையும் முன் வைக்கப்பட்டிருக்கிறது. முட்டையும், காய்கறி போன்ற அழுகும் பொருளாக இருப்பதால் உள்ளூரிலேயே காய்கறிகளோடு சேர்த்து முட்டைகளையும் வாங்கிக் கொள்ளும் யோசனை பரிசீலிக்கத் தகுந்ததாக இருக்கிறது. ஆனால் பொறுப்பாளர்களால் முறைகேடுகள் நிகழாமல் தடுக்க, உள்ளூர் தன்னார்வத் தொண்டு நிறுவனங்களின் பிரதிநிதிகளையும் இணைத்துக் கொண்டு செயல்படலாம்.

"சத்துணவு திட்டத்தைச் சிறப்பாகச் செயல்படுத்தும் பொறுப்பு ஊரகத் தொழில்கள் அமைச்சர் ஐ. பெரியசாமிக்கும், எனக்கும் உண்டு. முதல்வர் அவர்கள் எங்களுக்கு சிரிய முறையில் வழி காட்டிக் கொண்டிருக்கிறார். இந்த முட்டை விவகாரத்திலும் எதிர் காலத்தில் எந்தவித பிரச்னைகளும் ஏற்படாமல் இருக்க, எங்கள் யோசனைகளையும் முதல்வர் முன் வைப்போம்!" என்றார்.

சந்திப்பு : **ப்ரியன்**

# புதிய மழை

குடத்தில் தண்ணீர் பிடித்துக் கொண்டு திரும்பிய சுந்தர், எதிர் பிளாட்டைப் பார்த்தான். ஜெயந்தியின் அக்கா தலையுயர்த்திக் கொண்டிருந்தாள்.

இன்று வெள்ளி. ஜெயந்தியும், தலைக்குக் குளித்திருப்பாள். நெளி நெளியான குட்டை முடி. வட்டமுகம். ஓவல் ஷேப் கண்ணாடி. சுடிதாரோ, ஜீன்ஸோ! உறுத்தாத உயரம். வாய் பேசாவிட்டாலும் கண்களே சம்பாஷிக்கும். அதில் கண்ணீர் திரண்டது தன்னால்தான் என்று சட்டென ஞாபகம் வந்தது.

எத்தனை ஆர்வம் அந்தக் கண்களில்? ஒவ்வொரு வார்த்தையாய்க் கோத்தபோது பின் நின்ற தயக்கத்தில் என்ன ஒரு மென்மை? மனம்தான் வாய் கொண்டு பேசுகிறதோ என நம்பும்படி என்னவொரு நளினம்?

எல்லாம் இரண்டு நிமிடங்களில் சிதறிப் போனது.

"என்னத்துக்கு இப்படி உளர்றே? என்னைப் பத்தி உனக்கு என்ன தெரியும்? காதல், கல்யாணம்னெல்லாம் பேசற. ஐ திங், இன்னும் நீ அந்த டீன்ஏஜ் மேனியாவுலேருந்து வெளிய வரலேன்னு நெனைக்கறேன். டோன்ட் பி சில்லி... ஓ.கே?"

எது இப்படிப் பேச வைத்தது? தெரியவில்லை. கர்வமா? என்ன கர்வம்? கோழைத்தனமா? பொறுப்பேற்கத் தயக்கமா?

சுந்தருக்கு ஒரே குழப்பமாக இருந்தது. நான்கு நாளாய் வேறேதோ யோசனை. வேலை வேகம். உற்சாகம். ஜெயந்தி ஞாபகமே வரவில்லை. சென்னைக்குப் பஸ் ஏறிய போதுதான் ஜெயந்தியின் கண்ணீர் ஞாபகத்தில் தெறித்தது. அப்புறம் ரொம்ப நேரம் தூக்கமில்லை.

எதிர் பால்கனியில் ஜெயந்தி தலை தென்பட்டது. சுந்தர் சட்டெனப் பின்னகர்ந்தான். எப்படி அவள் முகத்தைப் பார்ப்பது?

"ஜெயந்திக்கு நீ ஊருக்குப் போறது தெரியாதுடா?" சாதம் போட்டுக் கொண்டே அம்மா கேட்டாள். சட்டெனத் தலைநிமிர்ந்த சுந்தர்,

"ஏன்?" என்றான்.

"நீ போன மறுநாள் போன் பண்ணினா. நீ இருக்கியான்னு கேட்டா. மெட்டர் பண்ண போயிருக்கேன்னு சொன்னேன். நீ அவகிட்ட சொல்லலியா?"

"இல்லை."

"ஏன், ஏதாவது மனஸ்தாபமா?"

இல்லையென்பது போல தலையாட்டினாலும், அம்மாவுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அம்மாதான் ஜெயந்தியையே அறிமுகப்படுத்தியது. என்னவோ கல்லூரி மேட்டருக்கு, கருத்துச் சொல்ல ஆட்கள் தேடிய போது, அம்மா, ஜெயந்தியைச் சொன்னார்.

"எம்.ஏ. மாஸ் கம்யூனிகேஷன் பண்றா. நன்னா பேசுவா. பளிச்சின்னு இருப்பா. அவகிட்டயும் கேள்வி கேட்டு, போட்டோ போடேன்டா..."

பத்திரிகை மேட்டருக்கு அழகாய் பெண்கள் தேவைப்படும்போதெல்லாம், அம்மாவே சரணாகதி. முதலில் விவரம் புரியாவிட்டாலும், அப்புறம் அப்புறம் அம்மா தேறி விட்டாள். காலனியில் உள்ள பல பெண்களுக்கு, அம்மாதான் பி.ஆர்.ஓ. இன்றைய தேதியில் அம்மா ரகவாரியாய்ப் பிரித்து வேறு வைத்திருக்கிறாள். கல்லூரிப் பெண்கள், குடும்பத் தலைவிகள், அலுவலகப் பெண்கள், இத்யாதி இத்யாதி பட்டியல்கள்.

ஜெயந்தியின் கருத்துக்கள் ஒரிஜினலானவை. எங்கும் கடன் வாங்காத, நேர்மையான அக்மார்க் அபிப்பிராயங்கள். அந்த வயசுக்கு அதுவே உத்தமம் என்றுதான் சுந்தர் நினைத்தான். அப்புறம்தான்

ஆர். வெங்கடேஷ்

அவளின் பல பரிமாணங்கள் புரிந்தன.

ஜெயந்திக்கு இந்தி தெரியும். கையெழுத்து பிரமாதமாக இருக்கும். முதல் முறையாய் தனது கையெழுத்தை ஊன்றிக் கவனித்தது, ஜெயந்தியின் கையெழுத்தைப் பார்த்த பின்னர்தான். பத்திரிகைக்காரன், அதனால் கையெழுத்து போய் விட்டது என்று காரணம் சொல்லிக் கொண்டாலும், மனம் சமாதானப்படவில்லை.

அடுத்த நாளே போய் கையெழுத்துப் பயிற்சிப் புத்தகங்களை வாங்கி வந்து, இரவெல்லாம் எழுதிப் பழகியது இன்னும் நினைவுண்டு.

இதெல்லாம் எதற்குச் செய்தோம்?

பின்னொரு நாள், கையெழுத்தைப் பார்த்து விட்டு, ஜெயந்தி உற்சாகமாய்ப் புகழ்ந்த போது, ஏற்பட்டது என்ன?

**சு**ந்தருக்குக் கை வலித்தது. ஊருக்குப் போய் வந்த கதையை எழுதியாயிற்று. மணி பார்த்தான். இரண்டரை. ஒரு டீ குடித்து வரலாம் என்று எழுந்தான்.

டீக்கடையில், பக்கத்து சீட் விஜயன், திடீரென்று, "உங்காளு எப்படி இருக்கா?" என்றபோது அதிர்ந்தான்.

"யார் எங்காளு?"

"தெரியாத மாதிரி கேக்கற பார்த்தியா? அதான் ஜெயந்தி."

"அது எங்காளு இல்ல சார்."

"சரி, அவ போன் பண்ணினாப்பா. சொல்லவே மறந்துட்டேன். நீ வந்துட்டியான்னு கேட்டா. இன்னிக்கு வருவேன்னு சொன்னேன்."

மனச்சங்கடம். மீண்டும் எப்படி அவள் முகத்தைப் பார்ப்பது? கண்ணீர் திரண்ட போதாவது, நின்று நிதானமாய்ச் சமாதானம் சொல்லியிருக்க வேண்டும். புரிய வைத்திருக்க வேண்டும். என்ன காரணத்துக்காக வேண்டாமென்றேன் என்பது அவளுக்குத் தெரியுமா? தனக்கே தெளிவாய்த் தெரியுமா என்று ஒருமுறை கேட்டுக் கொண்டான்.

தெளிவில்லை என்பது உண்மை. அதே போல், தான் அவளுக்குத் தகுதியில்லை என்பதும் உண்மை.

"சட்புட்ன்னு அந்தப் பொண்ணையே கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானேப்பா" - விஜயன்.

"கல்யாணத்தப் பத்தியெல்லாம் நான் யோசிக்கவேயில்லை சார்."

"நாங்களெல்லாம் என்ன யோசிச்சா கல்யாணம் பண்ணிக்கிட்டோம்? அது ஒரு தேவை. அந்தந்த வயசுல நடக்க வேண்டிய ஒண்ணு. தள்ளிப் போடக் கூடாது."

சுந்தர் சிரித்தான், பின், "எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கையில்லை சார்."

"இதுல நம்

பிக்கை என்னா வேண்டிக் கெடக்குது. உனக்கென்ன? நிரந்தரமா ஒரு வேலை இருக்குது. பிக்கல் பிடுங்கல் கெடையாது. அம்மா மட்டும்தான். கம்முன்னு அந்தப் பொண் ணையே கட்டிக்கோயேன்."

"நீங்க நெனைக்கறா மாதிரி, அது அவ்வளவு சிம்பிள் இல்லை சார்."

"சரி, எதுதான் சிம்பிள் சொல்லு! எல் லாமே கஷ்டமானதுதான். டிரை பண்ணிப் பாக்கணும். அதுதான் முக்கியம்."

சுந்தர் ஒன்றும் சொல்லவில்லை. ஏதா வது சொன்னால், இன்னும் கவைக்குதவாத பேச்சு வளரும். சொல்லப் போனால், சுந்தர் காதலுக்கோ, கல்யாணத்துக்கோ எதிரி யில்லை. அவனுக்கு பெண் ஒரு புதிருமல்ல. ஜெயந்தி மேல் கண்டிப்பாய் வெறுப் பில்லை. கடந்த மூன்றாண்டுகளாய் அவ ளது ஒவ்வொரு குணமும் திறமையும் வெளிப்பட்டபோதெல்லாம், பிரமித்தவன் சுந்தர். பாராட்டியவன் சுந்தர்.

ஆனால் கல்யாணம் என்பது வேறு விஷயமல்லவா?

அலுவலகத்திற்குள் போன போது வரவேற்பிணி, ஜெயந்தி போன் செய்த தாய்ச் சொன்னாள்.

**ஹா**லில் அம்மா உறங்கிக் கொண் டிருந்தாள். வயதானதற்கான அத்தனை அடையாளங்களும் அம்மாவிடம் உண்டு. இன்னும் மாறாதிருப்பது மன உறுதி.

அப்பா ஆக்ஸிடெண்டில் போய் பதி மூன்று ஆண்டுகள். கருணை அடிப்படை யில் கிடைத்த வேலையில், இவனைப் படிக்க வைத்தாள். முன்னேற்றினாள். சுற்ற மும் நட்பும் சுந்தரை மெச்சினால், அதற் கான அடித்தளம் அம்மாவுடையது. இன் றைக்கு இப்படியொரு வாடகை கொடுத்துக் கொண்டு பிளாட்டில் வாழ முடிகிற தென்றால் அதுவும் அம்மாவின் அடித்தளம் தான்.

ஆனால், அம்மா அவ்வளவாய் மாற வில்லை. சண்டையென்றால் செவி கொள் ளாது பேசுவாள். கேசும், பிரிட்ஜும் இருந் தாலும், அதை அழகாய் வைத்துக் கொள் ளத் தெரியவில்லை. புடைவையில் எப் போதும் ஒரு புளி வாசனை. இதனையெல் லாம் மாற்ற முயற்சிப்பது அபத்தம். அது அவள் வாழ்ந்த விதம். அவளை அப்படி விட்டு விடுவதுதான் இயல்பு. அவளுக்கு அனுசரணையாய் இருப்பவளை வீட்டுக்குக் கூட்டி வருவதுதான் சரி.

ஆனால், ஜெயந்திக்கு இந்த வீடு இயல் பாயிருக்குமா?

தெரியவில்லை.

ஜெயந்திக்குப் போனே பண்ணவில்லை என்பது ஞாபகம் வந்தது. சாயங்காலம் அவன் பணியாற்றும் விளம்பரக் கம்பெனி வழியாகத்தான் வந்தான். நிற்கத் தோன்ற வில்லை. வழக்கமாய் நின்று, அவளைக் கூட் டிக் கொண்டு, நேரமிருந்தால் ஏதாவது புத் தகக் கடை, லைப்ரரி அல்லது நேராய் வீடு வருவதுதான் வழக்கம். இன்று இயல்பு தப்பி விட்டது.

அதைவிடப் போன் பண்ணவில்லை. என்ன நினைத்துக் கொள்வாளோ? இன் னும் தெளிவாய்ப் பேசியிருக்க வேண்டும்? தன் பிரச்னை என்ன? தன் எண்ணம் என்ன? தன் எதிர்பார்ப்பு என்ன? இவை யெல்லாவற்றுக்கும் பொருந்தக்கூடியவளா ஜெயந்தி?

பொருந்துவாள். கண்டிப்பாய்ப் பொருந்துவாள், சுந்தருக்காக. தன் சுயத்தை விட்டு விட்டு, விருப்பங்கள், ரசனையை விட்டு விட்டு, சுந்தருக்காகப் பொருந்து வாள். அதுதான் சுந்தருக்குக் கஷ்டமாக இருந்தது.

காதல், கல்யாணம் என்பதற்காக, ஒருத்தியின் இயல்பை கைவிடச் சொல்வது அராஜகமல்லவா?

அடிப்படை பிரச்னை வேறெங்கோ இருக்க, ஜெயந்தியை டீன்-ஏஜ்மேனியா என்றெல்லாம் கேலி செய்திருக்க வேண் டியதில்லை. இன்னும் கௌரவமாய்ப் பேசி யிருக்கலாம். இணையாய் பாவித்து நடத்தி யிருக்கலாம்.

ஒருவேளை, அவள் தன் காதலை வெளிப்படையாகத் தெரிவித்தது கூட, சுந்தருக்கு அதிர்ச்சியோ? சட்டென எதிர்கொள்ள முடியாமல், போட்டுக் கொண்ட முகமூடியா அந்த இறுக்கம்?

யோசிக்க யோசிக்க மனம் வெதும்பியது.

விளக்கணைத்தபோது, போன் மணி ஒலித்தது.

"என்னைப் பார்க்க வரலைன்னாலும் பரவாயில்லை. அப்பாவைப் பார்க்க வரலா மில்லையா? அப்பா உங்களை பார்க் கணும்னார். அக்கா பிரச்னை பெரிசாயிக் கிட்டே இருக்கு. உங்களுக்கு யாராவது போலீஸ்காரங்களைத் தெரியுமான்னு கேட் டார். நாளைக்கு வீட்டுக்கு வர முடியுமா?"

(தொடரும்)




1998 அக்டோபர் 11
வெகுதான்ய புரட்டாசி 25
மலர் : 57
இதழ் : 11

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## ஊழலற்ற முன்னணி!

'மதச்சார்புள்ள கட்சியான பி.ஜே.பி. ஆட்சியிலிருப்பது இந்தியாவுக்கே அச்சுறுத்தல். மதச்சார்பற்ற மூன்றாவது முன்னணியை அமைப்போம் வாரீர்' என்று புறப்பட்டிருக்கின்றன இடதுசாரிக் கட்சிகள். சி.பி.ஐ.(எம்) தலைவர் சுர்ஜீத், மூப்பனாரைச் சந்தித்து, இந்த மூன்றாவது அணிக்கான திட்டங்களைப் பற்றிப் பேசியிருக்கிறார். மூப்பனாரும் மூன்றாவது முன்னணியை வரவேற்றிருக்கிறார். இந்த மாதம் டெல்லியில் சந்தித்து, புதிய வியூகத்தை அமைப்பது குறித்து மேலும் பேசி முடிவெடுக்கப் போகிறார்கள் தலைவர்கள்.

இந்த நிலைமையில் மூப்பனார் குறிப்பிட்டுள்ள ஒரு முக்கியமான விஷயம் கவனத்துக்குரியதாய் இருக்கிறது :

காங்கிரஸை உள்ளடக்கியே இந்த மூன்றாவது முன்னணி திட்டமிடப்பட வேண்டும் என்று கருத்து வெளியிட்டிருக்கிறார் மூப்பனார்.

ஐக்கிய முன்னணி ஆட்சிக் காலத்திலேயே, வெளியிலிருந்து ஆதரவு அளித்த காங்கிரஸை, ஆட்சியில் பங்கேற்கச் செய்ய வேண்டும் என்று முயன்றவர்தாம் மூப்பனார். அவரது இப்போதைய நிலையும் அதையொட்டியே அமைந்திருக்கிறது.

காங்கிரஸையும் சேர்த்துக் கொள்ளும்பட்சத்தில், அது மூன்றாவது முன்னணியாக இராமல், மதவாத கட்சியான பி.ஜே.பிக்கு எதிரான ஒரே முன்னணியாகத்தான் அமையும்.

தேர்தல் என்று வரும்போது, மும்முனைப் போட்டியினால் வாக்குகள் சிதறிப்போய், பெரும்பான்மை பலம்பொருந்திய ஆட்சி அமைய வழியில்லாத ஒரு நிலை மீண்டும்




உருவாகாது.

'காங்கிரஸை விட்டுப் பிரிந்து வந்த மூப்பனாரே காங்கிரஸுடன் கூட்டணி விழைவதா...?' என்ற கேள்வி எழாமல் இல்லை.

ஆனால் அன்றைய விலகலுக்குக் காரணம் ஊழலின் மொத்த உருவமான அ.தி.மு.க.வுடன் காங்கிரஸ் தேர்தல் உடன்படிக்கை செய்து கொண்டதுதான். இப்போதோ, அ.தி.மு.க.வின் சார்பு பி.ஜே.பி. பக்கம். எனினும் தேர்தல் வரும் நேரத்தில் காங்கிரஸ் தனித்து விடப்பட்டால், மீண்டும் அ.தி.மு.க.வுடன் உறவு வைத்துக் கொள்ளக்கூடும். அதற்கான ஆரம்ப முயற்சிகள் இப்போதே கூட தென்படுகின்றன. அவ்வாறு நடந்தால், கம்யூனிஸ்டுகள், த.மா.கா. போன்றோர் அடங்கிய மூன்றாவது அணியின் வெற்றி வாய்ப்புகள் வெகுவாகக் குறையும்.

இதையெல்லாம் எடைபோட்டுப் பார்த்துத்தான் மூப்பனார் பேசியிருக்கிறார்.

'காங்கிரஸுடன் கூட்டணி வைத்துக் கொள்வது, ஊழலுடன் கூட்டணி அமைத்துக் கொண்டது போல் ஆகாதா...?' என்றும் வாதாடலாம். ஊழல் பேர்வழிகள் எந்தக் கட்சியில்தான் இல்லை? எனவே, 'ஊழல்' என்று முத்திரை குத்தி ஒட்டுமொத்தமாக ஒரு கட்சியை விலக்கி வைப்பதை விட, குற்றப் பத்திரிகை சுமத்தப்பட்ட நபர்களையும், குற்றவாளிகளையும் – அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களானாலும் சரி – விலக்கி வைப்பதில் உறுதியாக இருப்பதுதான் முக்கியம்.

இந்த உறுதியோடு, நல்லாட்சி ஸ்திரமான ஆட்சி என்ற குறிக்கோளும் இணையுமானால் மதச்சார்பற்றதும் ஊழலற்றதுமான ஒரு முன்னணி உருவாகும்.

இன்று நாட்டுக்குத் தேவை, ஒரு மூன்றாவது அணியோ நான்காவது அணியோ அல்ல... ஒற்றுமை ஓங்கிய ஊழலற்ற ஒரு கூட்டணிதான்! – நித்ய கண்டம் பூர்ணாயுசு என்று நடைபெற்றுக் கொண்டிருக்கும் பி.ஜே.பி. ஆட்சி வீழ்கின்றபட்சத்தில், ஒரு சிறந்த மாற்று ஆட்சியை அளிக்கவல்ல முன்னணியாக அது விளங்க வேண்டும்.




## பாடமாகும் திரைப்படம்!

பவள விழா கொண்டாட்டங்களின் போது, சினிமாவைத் தமிழக அரசின் பள்ளிப் பாடத் திட்டத்தில் சேர்க்கலாம் என்று யோசனை வெளியிட்டார் பாலு மகேந்திரா. முதல்வரும் இதை ஏற்றார். மாணவர்கள் பள்ளிப் படிப்பைப் பாதியிலேயே விட்டு விட்டுப் போய் விடாமல் தடுக்க இந்த யுக்தி உதவும் என்றார். அவர் விளையாட்டாகச் சொன்னது உண்மையிலேயே பலன்தரக்கூடிய யோசனைதான்.

ஆனால், 'சினிமா' என்பதை பள்ளிப் பாடத் திட்டத்தில் எப்படிச் சேர்ப்பது? மாணவர்களுக்குப் படம் தயாரிக்க, இயக்க, நடிக்க கற்றுத் தருவதா? அல்லது நட்சத்திரங்களின் வாழ்க்கை வரலாற்றை போதிப்பதா?...

சினிமாவின் சரித்திரத்தை ஓரளவு எடுத்துச் சொல்லலாம். நல்ல சினிமாவை இனம் காணவும், ரசித்து, ஆய்வுசெய்து, எடைபோடவும் கற்றுத் தருவதே உபயோகமாய் இருக்கும்.

மாணவர்கள் மட்டுமின்றி, தமிழ்த் திரையுலகினரும் இதனால் பயன்பெறுவர். சிறந்த படங்கள் குறித்த ஒரு ரசனையை உருவாக்கிக் கொண்டுள்ள ஒரு தலைமுறைக்கு ஏற்ற வகையில் சினிமா உலகமும் தனது தயாரிப்புகளைத் திருத்தியமைக்க வேண்டி வரும். இதனால் தற்கால சினிமாவின் தரம் உயரவும் வழி இருக்கிறது.

இவ்வாறின்றி, சினிமா ஒரு பொழுதுபோக்குச் சாதனம் என்ற அடிப்படையில் தற்போதைய சினிமாவை உயர்த்தி வைத்து, அதே போக்கிலும் நோக்கிலும் பாடத்திட்டம் அமையுமானால், நமது எதிர்காலச் சந்ததியினரின் பண்பாடு பாழ்பட்டுப் போகும்.

சினிமா மட்டுமின்றி, கர்னாடக இசை, சாஸ்த்ரீய நடனம், கிராமியக் கலைகள் என்று பாரம்பரியக் கலைகளையும் இலக்கியத்தையும் அனுபவித்து மகிழும் வகையில் கலை நுகர்ச்சி பாடங்களைப் பள்ளி வகுப்புகளில் புகுத்தலாம்.

இந்த முயற்சியை அரசாங்கம் மேற்கொள்ளும்போது, தகுதி வாய்ந்த கலைஞர்களின் உதவியையும் பங்களிப்பையும் கேட்டுப் பெற வேண்டும்.

**மணி சங்கர் ஐயர் பற்றிய அறிமுகம் தேவையில்லை. அண்மையில் அவர் சென்னை வந்திருந்தபோது, அவரிடம் பேசினோம். ஜெயின் கமிஷன் அறிக்கையிலிருந்து, காங்கிரஸிலிருந்து மம்தா கட்சிக்குப் போய் மீண்டும் காங்கிரஸுக்கு வந்தது வரை பல விஷயங்கள் பற்றியும் பேசினார்...**

**"நீன் பள்ளிக் கூடத்தில் படிக்கிற போதே ராஜீவ் காந்தியுடன் உங்களுக்கு நெருக்கமாக பழக்கம் உண்டா?"**

"இல்லை. அவரை எனக்குத் தெரியும். அவ்வளவுதான். மற்றப்படி நெருங்கிப் பழகின தில்லை."

**"ராஜீவுடனான பழக்கம் இல்லாது போயிருந்தால், வேறு ஏதாவது அரசியல் கட்சியில் சேர்ந்திருப்பீர்களா?"**

"நிச்சயமாய் மாட்டேன். காங்கிரஸ் கட்சி ஒன்றுதான் தேசியக் கட்சி. ராஜீவ் காந்தியுடனான தொடர்பே ஏற்படாமல் போயிருந்தால் கூட, நான் காங்கிரஸில்தான் சேர்ந்திருப்பேன்."

**"அரசியலுக்கு வந்த வேகத்திலேயே தேர்தலில் போட்டியிட்டு, வெற்றியடைந்து, பாராளுமன்றம் போனது எப்படி இருந்தது?"**

"அது வெகு சுலபமான வெற்றி என்பதால், நான், ஒரு தப்புக் கணக்குப் போட்டு விட்டேன். அந்த வெற்றி நான் தனிப்பட்ட முறையில் பெற்ற வெற்றி என்று நினைத்தது தவறு என்று அடுத்த இரண்டு தேர்தல்களிலும் நான் போட்டியிட்டுத் தோற்றபோது புரிந்து கொண்டேன். தனிப்பட்ட முறையில் செல்வாக்கு என்று கணக்கிட்டால், என்னைத் தோற்கடித்த இரண்டு பேரையும் விட, மயிலாடுதுறை மக்களுக்கு என் மீதுதான் நல்ல அபிப்ராயமும், நம்பிக்கையும் உண்டு என நான் உறுதியாகச் சொல்லுவேன். ஆனால் கட்சி அரசியல் நடக்கும் நாட்டில், தனி நபரின் செல்வாக்கு என்பது ஒரு பெரிய விஷயமில்லை என்பதையும் நான் புரிந்து கொண்டிருக்கிறேன்."

**"காங்கிரஸ் கட்சியிலிருந்து பிரிந்து த.மா.க. உருவானபோது, அதில் நீங்கள் சேராதது ஏன்?"**

"த.மா.க என்பது அவசரக் கோலத்தில் எடுக்கப்பட்ட முடிவின் விளைவு. அது ஒரு கட்சியே அல்ல. எனவேதான் நான் காங்கிரசிலேயே இருந்தேன்."

**"இன்றைய சூழ்நிலையில், காங்கிரஸ் த.மா.க இணைகிற வாய்ப்பு உள்ளதா?"**

"காங்கிரசிலிருந்து பிரிந்து போன அனைவரும் காங்கிரசுக்குத் திரும்பி வந்து சோனியாவின் கரங்களை பலப்படுத்த வேண்டும். ஆகவே பிரிந்து போன எவரும், திரும்பி வரலாம். இரண்டே இரண்டு பேர் தவிர. அந்த இரண்டு பேரைத் திரும்ப, காங்கிரசில் சேர்த்



துக் கொள்ளக் கூடாது என்பது என் கருத்து."

**"யார் அந்த இரண்டு பேர்?"**

"மூப்பனாரும், சிதம்பரமும். நரசிம்மராவிடம், அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொள்ளக் கூடாது; நாம் தனித்து நிற்க வேண்டும்; என்று வற்புறுத்தினவர்கள், அ.தி.மு.கவுடன் கூட்டணி என்று முடிவானதும், காங்கிரஸிலிருந்து வெளியேறியபின், தனித்துத் தானே போட்டியிட்டிருக்க வேண்டும்? தி.மு.க.வுடன் கூட்டணி ஏன்? அதனால்தான் சொல்கிறேன்."

**"தமிழ்நாட்டில் மீண்டும் நீங்கள் அ.தி.மு.க.வுடன் கூட்டணி சேரும் வாய்ப்பு**

உள்ளதா?"

"ஏன்? அ.தி.மு.க.வுடன் கூட்டணி சேருவதில் தவறு ஒன்றுமில்லையே!"

**"நீங்கள் காங்கிரசிலிருந்து விலகி, மம்தாவின் கட்சியில் சேர்ந்தது ஏன்?"**

"கேசரியின் தலைமையில் காங்கிரஸ் அழிந்து கொண்டிருந்தது. கேசரியின் போக்கு பிடிக்காதவர்கள், காங்கிரசிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த சூழ்நிலையில் மம்தா வெளியேறி, புதிய கட்சியை ஆரம்பித்தார். நானும் வெறியேறினேன். அதற்கு முன்பு, சோனியாவைச் சந்தித்து என் நிலைமையை விளக்கினேன். 'நீங்கள் காங்கிரஸுக்குத் தலைமை ஏற்க வேண்டும்' என்று வற்புறுத்தினேன். ஆனால், அவர் அந்த தருணத்தில் அதற்குத் தயாராக இல்லை. அதனால்தான் நான் மம்தாவின் கட்சிக்குப் போனேன்."

**"மம்தா பானர்ஜி உங்களுக்கு தேர்தலில் சீட் தரவில்லை என்றுதான் திரிநாமூல் காங்கிரசிலிருந்து வெளியேறினீர்களா?"**

"இது ஆதாரமில்லாத கேள்வி. நான் கேட்ட ஹௌரா சீட் தரமுடியாது போனாலும், பாரக்பூர் உட்பட மூன்று தொகுதிகளில் எது வேண்டுமானாலும் தருவதாய்ச் சொன்னார். அதை ஏற்றுக் கொண்டிருந்தால், நான் வெகு சுலபமாக வெற்றி பெற்றிருக்கலாம். இன்னொரு விஷயத்தையும் நான் சொல்லியே ஆக வேண்டும். திரிநாமூல் காங்கிரசுக்கு இருபது சீட்களில் நிற்கவே வசதி இருப்பதால், முதல் எதிரியான சி.பி.எம்மைத் தோற்கடிக்க, வேறு எந்தக் கட்சிக்கும் மற்ற தொகுதியில் ஆதரவளிக்கலாம் என்றுதான் மம்தா குறிப்பிட்டார். பி.ஜே.பி. ஆட்சி அமைக்க ஆதரவு இல்லை என்றார். ஆனால் தேர்தலுக்குப் பின் தம் கொள்கையை மாற்றிக் கொண்டு விட்டார். நல்ல காலம்! நான் அந்தக் கட்சியிலிருந்து விலகி விட்டேன். தேர்தலில் வென்று எம்.பி.யாகியிருந்தால், தனிப்பட்ட முறையில் என் கொள்கைக்கு எதிராக பி.ஜே.பியை ஆதரிக்க வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகியிருப்பேன். அது போன்ற சூழ்நிலையில் என் எம்.பி. பதவியை ராஜினாமா செய்யவும் நான் தயங்கியிருக்க மாட்டேன்."

**"இந்திரா காந்தி படுகொலை பற்றி விசாரித்த தக்கர் கமிஷன் ரிப்போர்ட்டில் சந்தேகத்தின் ஊசி முனை நோக்கியிருந்த ஆர்.கே. தவானை, ராஜீவ் காந்தியே உயர் பொறுப்புகள் அளித்து, தமக்கு நெருக்கமாக வைத்திருந்தார். ராஜீவ் கொலை வழக்கில் இப்போது சிறப்பு நீதி மன்றத்தில் 26 பேருக்குத்தூக்கு தண்டனை அளித்து அப்பீல் நடக்கிறது. இனிமேல் புதிதாய் யார் மேலாவது குற்றம் கண்டு பிடித்தாக வேண்டும் என்கிற முனைப்பு ஏன்?"**

"ஆர்.கே. தவான் மீது சந்தேக ஊசி முனை திரும்பியிருப்பதை தக்கர் கமிஷன் குறிப்பிட்டது வாஸ்தவம்தான். அது உண்மையா என்று சி.பி.ஐ. விசாரணை நடத்தி, தவான் பற்றி சந்தேகமில்லை என்று கூறிய பின்னர் தான் ராஜீவ் அவருக்குப் பொறுப்புகள் அளித்தார். இப்போது, ராஜீவ் கொலையின் சதித் திட்டத்தில் சம்பந்தப்பட்ட அனைவரும் கண்டு பிடிக்கப்பட்டு, தண்டனை பெற வேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை."

# நான் ஏன் தமா.கா.வில் சேரவில்லை!

**"கடைசியாய் ஒரு கேள்வி. ஏன் அரசியலுக்கு வந்தோம் என்று வருத்தப்பட்டதுண்டா?"**

"இல்லை. மாறாக அரசியலில் ஈடுபடுவதை நான் விரும்புகிறேன். சுதந்தரப் போராட்டத்தின்போது, தம் தொழிலில் புகழின் உச்சியிலிருந்த மேதைகளான பட்டேல், மோதிலால் நேரு போன்ற பலர், அதைத் துறந்துவிட்டு, அரசியலுக்கு வந்தனர். ஆனால், அரசியல் ஒரு சாக்கடை என்று கூறிக் கொண்டு, படித்தவர்கள் வராமல் ஒதுங்கி விடுகிறார்கள். அதனால்தான் மக்களைப் பற்றி அக்கறை இல்லாத கிரிமினல்கள் போன்றோரின் கையில் அரசியல் இருக்கிறது. படித்தவர்கள் பெரும் அளவில் அரசியலுக்கு வர வேண்டும் என்பதே என் விருப்பம்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

**— மணிசங்கர் ஐயர் பேட்டி**

“பிள்ளைகள் இரண்டு பேரும் சின்னவர்களாய் இருந்தபோது, எனக்கு நேரம் போதாது. இப்போது இரண்டு பேரும் வளர்ந்து விட, எனக்கு நேரம் போக மாட்டேன் என்கிறது” என்று சொல்லுகிறார் சென்னை மாநகர போலீஸ் கமிஷனரின் மறுபாதியான சாரதா. “காலை நேரத்திலாவது பூஜை, சமையல் என்று பொழுது போய்விடுகிறது. பிற்பகலில்தான் சிரமமாக இருக்கிறது. அதனாலேயே மாலை நேரத்தில் ஒரு முக்கால் மணி நேரம் வாக்கிங் போவதைக் கட்டாயமாக்கிக் கொண்டு விட்டேன். உடம்புக்கும் எக்ஸர்சைஸ்; நேரமும் போகும்.”

சொந்த ஊர் திருச்சிதான். ஆனால் ஐந்து தலைமுறைகளுக்கு முன்னால், ஹைதராபாத் நவாபின் மருத்துவ ஆலோசகராகப் பணியாற்ற ஆந்திரவுக்குக் குடி பெயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். அதன் பின் கடப்பாவில் செட்டிலாகி விட்டார்கள். சாரதாவின் அப்பாவுக்கு, ஆந்திர அரசாங்கத்தில் சுகாதாரத் துறையில் உத்தியோகம். ரொம்பக் கட்டுப்பாடான வளர்ப்பு. பள்ளிப் படிப்பை முடித்த பிறகு, சாரதாவுக்கு, கல்லூரியில் சேர்ந்து படிக்க வேண்டும் என்று ஆசை. ஆனால், அவருடைய அப்பா, கோஎஜுகேஷன் கல்லூரிக்கு அனுப்பிப் படிக்க வைக்கத் தயாராக இல்லை. ஆனால் அதிர்ஷ்டம் சாரதாவின் பக்கம் இருந்தது. கடப்பாவிலேயே ஒரு பெண்கள் கல்லூரியைத் திறந்தது ஆந்திர அரசாங்கம். பிஎஸ்ஸி (பாட்டனி) சேர்ந்தார்.

“பாட்டனியில் ஏன் பிரத்யேக ஆர்வம்?”

“எங்கள் வீட்டில் பெரிய தோட்டம் இருக்கும். தினமும் கொஞ்ச நேரம் அங்கே செலவிடுவேன். சின்ன வயது முதலே செடிகள் என்றால் ரொம்பப் பிடிக்கும். அதான் பாட்டனி சேர்ந்தேன்.”

மூன்றாவது வருடம் முடித்த கையோடு கல்யாணம். சென்னையிலிருந்த குடும்ப நண்பர் மூலம், பெண் பார்க்க ஏற்பாடானது. அப்போது காளிமுத்து விருதுநகரில் ஏ.எஸ்.பி. ஆகப் பணிபுரிந்து கொண்டிருந்தார்.

“ஒரு விசித்திரம் என்னவென்றால் இவருக்குத் தமிழ் ஆர்வம் அதிகம். இப்போது கூட நிகழ்ச்சிகளில் கடகடவென்று இவர் தமிழில் உரையாற்றுகிற போது, நான் ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டிருப்பேன். நான் பிறந்து வளர்ந்தது எல்லாம் கடப்பாவில்தான் என்பதால், வீட்டில் கூட தெலுங்கு தான் பேசிக் கொள்ளுவோம். இதையெல்லாம் தெரிந்து கொண்டு அவர், என்னைப் பெண் பார்க்க வந்தபோதே கையோடு எடுத்துக் கொண்டு வந்த ஒரு புத்தகத்தை எனக்குப் பரிசளித்தார். அந்தப் புத்தகம் ‘முப்பது நாளில் தெலுங்கு மூலம், தமிழ் கற்றுக் கொள்ளுங்கள்!’

“அந்தப் புத்தகத்தைப் படித்து, நான் எங்கள் திருமணத்துக்கு முன்பாகவே, ஓரளவு தமிழ் கற்றுக் கொண்டு விட்டேன். அந்தப் புத்தகமும் என் அம்மாவும் தான் எனக்குத் தமிழ் ஆசிரியர்கள்.

“அவர் ரொம்ப சிரியஸான மனிதர். எனவே எங்களுக்கு நிறைய நண்



பர்கள் கிடையாது. இரண்டு குழந்தைக ளோடு நிறுத்திக் கொள்ளுவது என்று முடி வெடுத்த எங்களுக்கு இரண்டும் பையன்கள். பெண் இல்லையே என்ற சின்ன வருத்தம் எனக்கு ஒரு பக்கம் இருக்கத்தான் செய்கிறது.

"கோவை, தஞ்சை, நாகப்பட்டினம், கன்னியாகுமரி என்று தமிழகத்தில் ஒரு ஊர் பாக்கியில்லை. எல்லா ஊரும் பார்த்தாகி விட்டது. நாகப்பட்டினத்தில் இருந்தபோது, ஒரு டிரைவர் இருந்தார். நல்ல மனிதர். நாங்கள் டிரான்ஸ்ஃபர் ஆகிப் போன பின் அவர் திடீரென்று மாரடைப்பால் காலமாகி விட்டார். அவருடைய குடும்பத்துக்கு வர வேண்டிய பணம் ரொம்ப நாளாகியும் செட்டிலாகாத சூழ்நிலையில், ஒரு நாள் இறந்த டிரைவரின் மனைவி என்னை வந்து சந்தித்து அழுதார். நான் இவரிடம் சொல்ல, அவர் உயர் அதிகாரிகளிடம், அந்தக் குடும் பத்தின் நிலைமையை எடுத்துச் சொல்லி உடனடியாகப் பணம் கிடைக்க வழிசெய் தார். அந்தப் பெண்மணி, கண்ணீர் மல்க நன்றி கூறியதை மறக்கவே முடியாது.

"அண்மையில் சாமான்கள் வாங்க, வழக்கமாய்ப் போகும் டிபார்ட்மென்டல் ஸ்டோருக்குப் போயிருந்தேன். ஒரு விற் பனைப் பெண்மணி என்னைப் பார்த்த வுடன், 'மேடம்! அண்மையில் மூடப்பட்ட நிறுவனத்தில் நான் சிறுகச் சிறுக சேமித்த பணத்தைப் போட்டு வைத்திருந்தேன். இப்போ என்ன செய்வது என்று தெரிய வில்லை' என்று அழுதார். மறுநாள் கமிஷனர் அலுவலகத்தில் போய் இவரைச் சந்தித்து, மனு தரும்படி சொன்னேன்."

"ஒரு போலீஸ் அதிகாரியைத் திருமணம் செய்து கொண்டதற்காக வருத்தப்பட்ட துண்டா?"

"இருபத்து நாலு மணி நேரமும் டியூட்டி தான். இரவு பகல் கிடையாது. சனி, ஞாயிறு கிடையாது. இதுபோன்ற டென்ஷனான வாழ்க்கை வாழ வேண்டியுள்ளதே என்று சில சமயம் அலுப்பு ஏற்படுவதுண்டு. ஆனா

## பிரபலங்களின் மறுபாதி: சாரதா காளிமுத்து



லும், இவர் கடமையைச் செய்து, அதற்குரிய பாராட்டு கிடைக்கிறபோது சந் தோஷப் பட்டதும் உண்டு. 89ல் ஒரு தடவை இவரது சேவையைப் பாராட்டி ஜனாதிபதி விருது வழங்கினார்கள். மறுபடியும் போன வருடம் இரண்டாவது தடவையாக ஜனாதி பதி விருது கிடைத்தபோது மிகவும் சந்தோஷ மாக இருந்தது. ஆனாலும், என் பிள்ளை களுக்கு இந்தப் பணி வேண்டாம் என்பது தான் என் கருத்து. முதல் பையன் இஞ்சி னியரிங் முடித்துவிட்டு ஹூண்டாய் கார் கம்பெனியில் வேலை பார்க்கிறான்; இரண் டாவது பையன் கோவையில் பி.ச. கம்ப் யூட்டர் சயின்ஸ் படிக்கிறான்."

"அவருக்கு வீரப்பனைப் பிடிக்கும் பணி அளிக்கப்பட்டபோது, உங்களுக்கு எப்படி இருந்தது?"

"ரொம்ப நர்வஸாகத்தான் இருந்தது. அவர் அதைப் பற்றியெல்லாம் கவலைப்பட மாட்டார். மூனுமாத காலம் அங்கே முகா மிட்டபோது, இடையில் இரண்டொரு தடவைதான் சென்னை வந்து போனார். மற்றபடி அங்கே என்ன நடக்கிறது என்று ரெகுலராய்த் தகவல் வராது. பேப்பரைப் படித்தால் டென்ஷன்தான் ஏறும். நான் அப் போது கேதார கௌரி விரதம் கூட இருந் தேன். (கணவர் நலனுக்காக இருக்கும் விரதம்) பொதுவாகவே நாங்கள் இருவரும் கடவுள் பக்தி அதிகம் கொண்டவர்கள். அவர் சபரிமலைக்குப் போவார். அடிக்கடி திருப்பதிக்கும் போய் வருவோம்."

எம்பிராய்டரி, கேக், ஐஸ்கிரீம் செய் முறைகள், பூ அலங்காரம் எல்லாம் படித் திருக்கும் திருமதி காளிமுத்துவிடம் "தமிழில் இப்போது எப்படி?" என்றால்....

"புத்தகங்கள், பத்திரிகைகள் படிக்கு மளவுக் குத் தேறிவிட்டேன்!" என்கிறார்.

சந்திப்பு : பாரதி மௌலி

# "இந்த டென்ஷன் வாழ்க்கை என் பிள்ளைகளுக்கு வேண்டாம்!"

# ஆண்களுக்கு 33 சதம் ஒதுக்கீடு!

**"நீங்கள் ஒரு சர்வாதிகாரியாக இருந்தால் என்ன செய்வீர்கள்?" என்று மதுரையிலுள்ள மீனாட்சி மகளிர் கல்லூரி மாணவியரிடம் கேட்டோம்....**



**1. ஜே. ப்ரியா ஜெய ராணி (பி.எஸ்ஸி வேதியியல்) :** கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற குற்றங்களுக்கு மிகக் கடுமையான தண்டனை விதிப்பேன். அன்பையும், பக்தியையும் போதிப்பேன்.



**2. பி.கே. ராம லட்சுமி (பி.எஸ்ஸி. வேதியியல்) :** ஜாதி தான் இன்று பல கலவரங்களுக்குக் காரணமாயுள்ளது. எனவே ஜாதி என்பதே எங்கும் இல்லாமல் செய்வேன்.



**3. என். உமா தேவி (பி.எஸ்ஸி. வேதியியல்) :** சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்துவோரையும், இயற்கை வளங்களை அழிப்போரையும் கடுமையாகத் தண்டிப்பேன்.

**4. உ. மரகதம் (புவியியல், மூன்றாமாண்டு) :** சமத்துவபுரம் என்று தனியே ஏற்படுத்தாமல் நாட்டையே பெரிய சமத்துவபுரமாக்குவேன். சக மனிதர்களை யார் வித்தியாசப்படுத்தி தாழ்வுபடுத்தி நடக்கிறார்களோ அவர்களுக்கு நடுத்தெருவில் மரண தண்டனைதான்.

**5. எஸ். மீனாட்சி (பி.ஏ. தமிழ்) :** பொருளாதார ரீதியில் மட்டுமே இட ஒதுக்கீடு செய்வேன். முக்கியமான விஷயம் - பொய்யான



'இன்கம் சர்டிஃபிகேட்' தந்தால், தாசில்தாருக்கு மரண தண்டனை!

**6. சோ. பிரேம் பவானி (பி.ஏ. தமிழ்) :** என் நாடு ஏழை நாடாக இருந்தாலும், கோழை நாடாக இருக்கக்கூடாது. அணுகுண்டு மட்டுமல்ல ஹைட்ரஜன் குண்டு, அது, இது என்று ஏராளமான ஆயுதங்களைத் தயாரித்து அன்னிய நாடுகளின் வாலறுப்பேன்.





**7. ச. ராஜேஸ்வரி (பி.ஏ. தமிழ்) :** சொத்துக்கு வரம்பு வைத்து, மீதி சொத்துக்களைப் பிடுங்கி ஏழை மக்களுக்கு அதிகம் உதவுவேன்.

**8. எல். தனலட்சுமி (பி.ஏ.**



தமிழ்) : மக்களுக்கு எப்போதும் நண்பனாக இருப்பேன். குற்றம் புரியும் கயவர்களுக்கு மட்டுமே நான் சர்வாதிகாரி.

**9. டி.சி. குப்புமணி (பி.ஏ. வரலாறு) :** இன்று பல மாநிலங்களுக்குத் தலைவலியாய் இருக்கும் பிரச்னைக்கு அதிரடி



தீர்வை ஏற்படுத்துவது தான் முதல் வேலை. அதான் ஸார்... நதிகள் பிரச்னை! வந்தவுடன் நதிகளெல்லாம் தடாலடியாய் தேசியமயம்தான்.

**10. கே. ராஜலட்சுமி (சுற்றுப்புறச் சூழல் உயிரியல், இரண்டாமாண்டு) :** கல்வி கட்டாய



மக்கப்படும். அரசு விடுமுறைகள் அறவே நீக்கப்பட்டு ஞாயிறு மட்டுமே விடுமுறை நாளாக்கப்படும். எல்லோருமே ஏதாவது ஒரு விதத்தில் எட்டு மணி நேரம் உழைத்தே ஆக வேண்டும்.

**11. ஆ. ப்ரியா (சுற்றுப்புறச் சூழல் உயிரியல்) :** லஞ்சம் வாங்கும் அரசு ஊழியர், போதை மருந்து கடத்துபவர்,



தவறு செய்யும் காவலர், காதலித்து ஏமாற்றும் ஆண்/பெண், வரதட்சணை கேட்பவர், குழந்தைகளை வேலைக்கு அனுப்பும் பெற்றோர், ஈவ் டீஸர்... இவர்களையெல்லாம் பாறையோடு சேர்த்துக் கட்டி கடலில் எறிவேன்.

**12. ராம. சகுந்தலா (பி.ஏ. தமிழ்) :** போதைக்கு எந்த ரூபத்திலும்



இடம் கிடையாது. வெற்றிலை பாக்கு, புகையிலை, சிகரெட், பீடி, சுருட்டு, சாராயம், கள், வெளி நாட்டு மது, அபின், ஹெராயின், கஞ்சா... என்று எந்த போதை வஸ்துவிற்கும் நாட்டில் அனுமதி கிடையாது. மீறினால் கொடிய தண்டனை தான்.



**13. வி. முத்துலட்சுமி (பி.ஏ. தமிழ்) :** உங்க மாதிரி பத்திரிகைக் காரங்களுக்குத் தான் முதல் தடை! ஏன்னா விழிப்புணர்வைத் தூண்டி, புரட்சியை உண்டு பண்ணிடுவீங்களே!



**14. ஆர்.எஸ்.வி. உமா மகேஸ்வரி (பி.எஸ்ஸி, வேதியியல்) :** நீதிமன்றங்களில் 'வாய்தா' ஒழிக்கப்படும். குறிக்கப்படும் நாளில் சம்பந்தப்பட்டோர் அனைவரின் வருகையும் மிகக் கட்டாயமாக்கப்பட்டு ஒரே நாளில் விசாரணையை முடித்து தீர்ப்பு தரப்படும்.



**15. ஏ.என்.ஆர். ஜெயபாரதி (பி.ஏ. தமிழ்) :** சினிமாவிற்குத்தான் முதல் தடை! அடுத்து - லாட்டரிகளுக்கும், லாட்டரி போல் நடைபெறும் பத்திரிகைகளுக்கும்.



**16. பி. பாரதி (பி.எஸ்ஸி. விலங்கியல்) :** பணக்காரர்களின் அளவுக்கு மீறிய சொத்தை பறிமுதல்

## காலேஜ் கார்னர்

செய்து வெளிநாட்டு கடன்களை அடைத்து கடனில்லாத இந்தியாவாக மாற்றுவேன். பெட்ரோல் போன்ற அத்தியாவசிய இறக்குமதிப் பொருட்களுக்கு ரேஷன்தான்!



**17. ஏ. அபுரோஜா (பி.எஸ்ஸி. வேதியியல்) :** படித்து முடித்த இளைஞர்கள் தகுந்த வேலை கிடைக்கும் வரை காத்திராமல் ஏதேனும் ஒரு வேலைக்குச் சென்றே ஆக வேண்டும். வெட்டியாய் சுற்றித் திரிய அனுமதியில்லை. 'கட்' அடிக்கும் மாணவர்களுக்கு உடல் உறுப்பில் ஒன்று கட்!

**18. ஏ. மீனாட்சி (பி.எஸ்ஸி, வேதியியல்) :** அறியாமை இறக்கச் செய்வேன்;



ஆக்கம் பிறக்கச் செய்வேன்; இன்னல் விலகச் செய்வேன்; ஈகை வளரச் செய்வேன்; உறக்கம் நீங்கச் செய்வேன்; ஊக்கம் தோன்றச் செய்வேன்; எண்ணம் உயரச் செய்வேன்: ஏக்கம் அழியச் செய்வேன்; ஐயம் தெளியச் செய்வேன்; ஒற்றுமை அரும்பச் செய்வேன்; நீங்க ஏன் ஸார் ஓடுறீங்க? இன்னும் ஓள, ஃ எல்லாம் பாக்கியிருக்கே!



**19. பி. உமா மகேஸ்வரி (பி.எஸ்ஸி. வேதியியல்) :** மதவாதிகளுக்குத் தடை விதிப்பேன். விரும்பிய படி வழிபாடு நடத்தலாம்; ஆனால் பிற மதத்தோடு உரசினால் மரண தண்டனைதான். கடவுளை நம்பாமல் இருக்கலாம்; ஆனால் கடவுளை பழித்தால் நாத்திகவாதிக்கும் அதே தண்டனை தான்.



**20. சி. பாரதி (பி.ஏ. பொருளாதாரம்) :** லஞ்சம், ஊழல், வன்முறை, சாதி வெறி, பாலியல் பலாத்காரம், மதவெறி போன்ற குற்றங்களுக்கெல்லாம் தண்டனை என்ன தெரியுமா? அவர்கள் உடலில் ஹெச்.ஐ.வி. கிருமிகள் செலுத்தப்படும். இதற்கு பயந்து குற்றங்கள் குறையும் தானே!



**21. எஸ். மங்கல கல்யாணி (பி.எஸ்ஸி. விலங்கியல்) :** நாட்டின் பல பிரச்னைகளுக்குப் பெரும் மக்கள் தொகையே காரணம். எனவே குடும்பக்கட்டுப்பாடு கட்டாயமாக்கப்படும். இறப்பு விகிதத்திற்கேற்பவே குழந்தை பெற்றுக் கொள்ள அனுமதி அளிக்கப்படும்.



**22. எம். மலர்விழி (பி.எஸ்ஸி. விலங்கியல்) :** கலவரத்துக்குக் காரணமான சாதித் தலைவர்களின் சிலைகள் அனைத்தும் தரை மட்டமாக்கப்படும். மனிதனுக்கும் கடவுளுக்கும் நேரடி உறவு மட்டுமே அனுமதிக்கப்படும். பூசாரி, சாமியார் போன்றவர்களுக்கு அனுமதியில்லை.



**23. கே. மீனா (பி.எஸ்ஸி. இயற்பியல்) :** யாராயிருந்தாலும் ஒரு குழந்தை மட்டுமே பெற்றுக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு மனைவி கிட்டேயும் ஒரு குழந்தை பெத்துக்கலாமான்னு கேட்கக் கூடாது. ஒரே மனைவி தான் அனுமதி!

**24. பி. மல்லிகா பேகம் (பி. எஸ்ஸி. ஹோம் சயின்ஸ்) :** கல்வி தவிர



வேறு இலவசம் என்ற பேச்சுக்கே இடமில்லை. எல்லாம் உழைத்தே வாங்கிக் கொள்ள வேண்டும்.



**25. எஸ். அன்புச் செல்வி (புவியியல் - மூன்றாம் ஆண்டு) :** திண்ணைகளில் உட்கார்ந்து வீண் பேச்சு பேசிப் பொழுதைக் கழிக்கும் வீணர்களும், உடலில் வலு இருந்தும் பிச்சை எடுக்கும் சோம்பேறிகளும் தேசத்துக்கு பாரமே! எனவே, சிரச்சேதம் தான்!

**26. எஸ். மீனாட்சி (பி.எஸ்ஸி. இயற்பியல்) :**



வறுமைச் சூழலில் அதிகக் குழந்தைகளைப் பெற்று, அவர்களை வேலைக்கு அனுப்பும் பெற்றோருக்கும் தண்டனை! வயதான பெற்றோர்களை நிராகரிக்கும் பிள்ளைகளுக்கும் தண்டனை!



**27. என் ஸ்ரீமதி (புவியியல் - மூன்றாம் ஆண்டு) :** உணவுப் பொருட்களில் கலப்படம் செய்பவர்களுக்கு கடும் தண்டனை



தரப்படும். அவர்களுக்கு மண் தான் உணவு. கடல் நீர்தான் குடிநீர். எப்படி நம்ம தண்டனை!

**28. ஆர். தீபா (பி.எஸ்ஸி. இயற்பியல்) :** சினிமாக்காரர்களுக்கு ரசிகர் மன்றம் வைக்கத் தடை. மெஸேஜ் இல்லாமல் படமெடுக்கத் தடை. வன்முறை, ஆபாசத்திற்கு தடை. சரி வரலையா... சினிமாவுக்கே தடை!



**29. ஏ. விஜயலட்சுமி (பி.எஸ்ஸி. இயற்பியல்) :** பொதுச் சொத்துக்களை சேதப்படுத்தும் கலகக்காரர்கள் பொதுமக்களால் கல்லால் எறிந்து கொல்லப் படுவார்கள். பந்த் நடத்த முயல்பவர்களுக்கும், வேலை நிறுத்தத்தில் ஈடுபடுபவர்களுக்கும் அதே தண்டனை!



**30. ஆர். இந்துமதி (பி.எஸ்ஸி, இயற்பியல்) :** எல்லா உயர் பதவிகளிலும் பெண்கள் தான். சரி, போனால் போகுது... ஆண்களுக்கு 33 சதவீத இட ஒதுக்கீடு தரப்படும். ●

சந்திப்பு : **கிரண் நியூஸ்**

படங்கள் : **'நேஷனல்' சுந்தர்**

## தெரியுமா உங்களுக்கு?

**த**மிழ்நாட்டில் முதன் முதலில் பொங்கல் வாழ்த்து அனுப்பும் வழக்கம் பெ. தூரன் அவர்களால்தான் ஆரம்பிக்கப்பட்டது. அப்போது (1928-ல்) மாநிலக் கல்லூரியில் படித்து வந்த பெ. தூரன், அகலமான குருத்துப்பனை ஓலைகளை அழகாக நறுக்கி, வண்ண மைகளைக் கொண்டு பொங்கல் வாழ்த்து எழுதினார். அந்தப் பொங்கல் வாழ்த்துக்களை கல்கி, திரு.வி.க. முதலிய தமிழறிஞர்களுக்கு அனுப்பினார். இந்த வழக்கம் வரவேற்கப்பட வேண்டிய ஒன்று என்று கல்கியும் திரு. வி.க.வும் பாராட்டினார்கள். திரு. வி.க. தம்முடைய நவசக்தி பத்திரிகையில் உழவர் திருநாளாம் பொங்கல் திருநாளுக்கு வாழ்த்து அனுப்ப வேண்டும் என்று தமிழ் மக்களுக்கு அன்பு வேண்டுகோள் விடுத்தார். அடுத்த ஆண்டிலிருந்து பொங்கல் வாழ்த்து அனுப்பும் வழக்கம் பரவ ஆரம்பித்தது.

ஆதாரம் : தமிழ் வளர்த்த அறிஞர்கள்

தகவல் : நாஞ்சில் உ. ராமநாதன்

# ஒரு சினிமாவும் ஒரு சினிமா விழாவும்!



உலகின் தலைசிறந்த பத்து திரைப்படங்கள் பட்டியல்ல ரெண்டாவது இடத்தைக் கிட்டத்தட்ட அம்பது வருஷத்துக்கு மேல தக்க வெச்சிட்டிருக்கற 'Bicycle thief' சமீபத்துல பார்க்க ஒரு வாய்ப்புக் கிடைச்சுது. (Thanks to சென்ஸார் ஞானராஜசேகரன்)

ஒரு நாலு பக்கச் சிறுகதை விஷயம். வேலையில்லாம இருக்கற ஹீரோவுக்கு போஸ்டர் ஒட்டற உத்தியோகம் கிடைக்குது. போஸ்டர் பண்டில், பசை, ஏணி-இதை எடுத்துட்டுப் போக சைக்கிள் அவசியம். அவனோட ஒய்ஃப், வீட்டுல இருக்கற பெட்ஷீட்டையெல்லாம் புதுசு மாதிரி தோய்ச்சி, அயர்ன் பண்ணி செகண்ட்ஸ்ல வித்து ஒரு சைக்கிள் வாங்கித்தரா.

வேலையும் சைக்கிளும் கிடைச்சுட்ட சந்தோஷம் அவனுக்கு முதல்நாளோட சரி; சைக்கிள் திருட்டுப் போயிடுது.

ஹீரோ அந்த சைக்கிள் திருடனைத் தேடறது தான் இந்த ஒண்ணே கால் மணி நேரப் படத்தோட ஸ்கிரிப்ட்.

Through out the film— ஒரு பிரும்மாண்டமான சைக்கிள் உலகமே கண் முன்னால விரியறது! படத்துல சைக்கிள் தவிர வேற எந்த ஒரு விஷயம் பத்தியும் ஒரு வார்த்தை பேச்சு கிடையாது. சைக்கிளைத் தேடிப் போற ஏழைத் தொழிலாளி-நாயகன் பார்வைல ரோம் நகரம் லைட் வீயிங்க்குக் கிடைக்குது. But, ரசிக்க முடியலை. ஏன்னா, சைக்கிள் தொலைஞ்சுட்டதுல ஹீரோவை விட அதிகமா படம் பார்க்கற நாம கவலைப்படறாப்பல Script!

எல்லாத்தை விடவும் பிரமாதம் அந்த கிளைமாக்ஸ். ஷார்ட் ஸ்டோரி ரைட்டிங்ல 'செகாவியன் டச்'னு ஒரு பிரயோகம் கேள்விப்பட்டிருக்கீங்களா? ஆண்டன் செகாவோட சிறுகதைகள்ல கடைசி வரில ஒரு கிரீடம் வெப்பார். பிரமிப்பூட்டும் திருப்பம் அல்லது ஒரு எதிர்பாராத, சிலிர்ப்பூட்டும் முடிவு.



• பாலக்காட்டு மணியுடன் ஜி.என்.பி.

# ஆடல் பாடல்

அமரர் கல்கி

**நா**ட்டில் பெரியோர்கள் பலர் தங்கள் அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் சங்கீதம் சம்பந்தமாக நான் இரண்டு வருஷத்துக்கு முன்பு கூறிய ஒரு அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டதைப் பகிரங்கப் படுத்த விரும்புகிறேன.

சங்கீத வித்வான் ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியத்தைப் பற்றி முன் ஒருமுறை எழுதிய போது, "ஜி.என்.பி. நாலு கச்சேரி செய்தால் ஒன்று நிச்சயம் நன்றாயிருக்கும்'' என்று எழுதியிருந்தேன்.

இப்போது, "ஜி.என்.பி. நாலு கச்சேரி செய்தால், அவற்றில் ஒன்று நிச்சயம் நன்றாயிருக்கும்'' என்று சொல்லும்படி ஆகி விட்டது.

இரண்டு வருஷத்துக்குள்ளே இவ்வளவு சிறந்த அபிவிருத்தி - மூன்று மடங்கு அபிவிருத்தி - ஜி.என்.பி. அடைந்திருப்பது குறித்து எனக்கு அளவில்லா ஆனந்தம் ஏற்படுகிறது.

இந்த அபிவிருத்திக்கு - இரண்டு வருஷத்துக்கு முன்னால் நான் சற்றும் எதிர்பாராத அபிவிருத்திக்கு - முக்கிய காரணம் ஜி.என்.பி.யின் சாரீரத்திலும் சங்கீத பாணியிலும் ஏற்பட்டிருக்கும் அதிசயிக்கத்தக்க மாறுதல்கள்.

'இமிடேஷன்' வைரமானது வாங்கியவுடனே பளபளவென்று பிரகாசிக்கிறது. சிறிது சிறிதாகப் பல்லை இளித்துக் கொண்டு வந்து கடைசியில் அதன் உண்மை ஸ்வரூபத்தை - அதாவது தான் வெறுங் கண்ணாடித் துண்டு என்பதை - காட்டி விடுகிறது.

உண்மையான வைரமோ அதனுடைய இயற்கை நிலையில் பிரகாசமின்றி மங்கிக் கிடக்கிறது. அதைப் பட்டை தீர்த்துத் தேய்க்கத் தேய்க்கப் பிரகாசம் பெற்று நவநவமான வர்ண ரேகைகள் வீசி ஜாஜ்வல்யமாய்த் திகழ்கிறது.

இமிடேஷன் வைரத்தைப் போல் முதலிலே நன்கு பிரகாசித்துப் பிறகு மங்கி விடும் வித்வான்களின் சாரீரத்தை நாம் பார்த்து அனுபவப்பட்டிருக்கிறோம்.

ஆனால், உண்மையான வைரத்தைப் போல் நாளாக ஆக மெருகு ஏறிப் பிரகாசிக்கும் சாரீரத்தை அவ்வளவு சுலபமாக நாம் பார்ப்பது கிடையாது.

**ச**மீப காலத்தில் இரண்டு சிறந்த சங்கீத வித்வான்களின் விஷயத்தில் அந்த அருமையான காரியம் நடந்திருப்பது குறித்து நாம் பெரிதும் சந்தோஷப்பட வேண்டும்.

ஜி.என்.பி. விஷயத்திலும், மதுரை மணி ஐயர் விஷயத்திலும் இந்த அதிசயம் நடந்திருக்கிறது.

நாலு வருஷத்துக்கு முன்னால் அவர்களுடைய பாட்டைக் கேட்கும்போது, "ஆஹா! இப்பேர்ப்பட்ட சங்கீத சம்பத்து உள்ளவர்களுக்குக் குரலில் இனிமையும் சுகபாவமும் இருந்தால் எவ்வளவு உயர்வாயிருக்கும்?'' என்று பரிதாபமடைந்தோம்.

இப்போது, அவர்கள் இருவருடைய சாரீரமும் எப்படி இனிமையும் சுகபாவமும் ஏறி, மிக மிக அபூர்வமான இடங்களில் எல்லாம் சிறிதும் தடுமாறாமல் சஞ்சரிக்கக் கூடியவையாயிருக்கின்றன என்பதைக் கண்டு அதிசயித்து மகிழ்கிறோம்.

ஜி.என்.பி.யின் சாரீரம் இரண்டு வருஷத்துக்கு முன்பு கூட இவ்வளவு பதமடைந்து சுகபாவம் பெற்றிருக்கவில்லை. நாலிலே இரண்டு கச்சேரியில், "இன்று சாரீரம் ஒத்துக் கொள்ளவில்லை!" என்று ஏமாற்றத்துடன் முடிவு செய்ய வேண்டியதாயிருக்கும்.

ஜி.என்.பி.யின் சாரீரம் இரண்டு கச்சேரியைக் கெடுத்ததென்றால், மூன்றாவது கச்சேரியும் சுகப்படாமல் போனதற்கு ஜி.என்.பி.யின் பிர்க்காமயமான சங்கீத பாணி காரணமாயிருந்தது.

பிர்க்கா சங்கீதத்தில் ஒரு தொந்தரவு என்னவென்றால், குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட பிடிகளில் எதிர்பார்க்கும் சங்கதிகள் விழுந்தேயாக வேண்டும். அப்படி விழாமல் போனால், 'விசிறி'கள் உடனே "இன்றைக்குக் கச்சேரி சுகப்படவில்லை" என்று தீர்ப்பளித்து விடுவார்கள்.

அதோடு, சாரீரமும் இடக்குச் செய்து எங்கேயாவது ஒரு இடத்தில் 'இங்கிலீஷ்' பேசிவிட்டால், கச்சேரி தொலைந்தது! அப்புறம், பாடகர் எவ்வளவுதான் 'கொடி' வித்தை செய்தாலும், கச்சேரி களை கட்டுவதில்லை.

**ரா**ஜாஜி அன்று சங்கீதத்தைப் பற்றிப் பொதுவாகச் சொன்னார் :- "டாங்கிகளையும் குண்டுகளையும் வைத்துக் கொண்டு நடத்தும் யுத்தத்தைக் காட்டிலும் இந்தச் சங்கீத யுத்தம் ரொம்பக் கடினமானது. அந்த ஆயுத யுத்தத்தில் ஒரு தடவை தோல்வியடைந்தால் இன்னொரு தடவை ஜயிக்கலாம். இந்தச் சங்கீத யுத்தத்திலே ஒரு தடவை தவறி விட்டால், போயே போச்சு!"

ராஜாஜி மேலே கூறியது, பிர்க்கா பிராதான்யமான சங்கீத பாணிக்கு மிகவும் பொருந்துவதாகும்.

இந்த இடையூறுகளையெல்லாம் ஜி.என்.பி. கடந்து மேலே வந்து விட்டார் என்பதை 4.8.44-ல் மயிலை சங்கீத சபையில் அவர் செய்த கச்சேரி நிரூபித்தது.

ஜி.என்.பி.யின் சாரீரமும் சங்கீத பாணியும் இப்போது அடைந்திருக்கும் மேன்மை, அன்று அவர் பைரவி ராக ஆலாபனை செய்தபோது வெளியாயிற்று.

உண்மையான கர்நாடக சங்கீதம் எப்படி இருக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ, அதில் என்னென்ன அம்சங்கள் இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறோமோ, அவ்வளவும் அந்த ஆலாபனத்தில் இருந்தன. பைரவி ராகத்தின் ஸ்வரூபத்தை அதில் பூரணமாகக் கண்டோம். நாபீ கமலத்திலிருந்து மேலோங்கி வந்த நாத கம்பீரத்தைக் கண்டோம். அதிசயமான லாகவத்தோடு ஆகாச வெளியில் இஷ்டப்படியெல்லாம் சஞ்சரித்து வந்த மனோ தர்மத்தைக் கண்டோம். சுருதியோடு கலந்து நின்ற கார்வையை ஆங்காங்கு கண்டோம். உசிதமான அளவு மணி உதிர்ப்பது போல் உதிர்ந்த பிர்க்காக்களையும் கண்டோம்.

இவ்வளவுடன் ஜி.என்.பி.யின் சாரீரம் எவ்வளவு தூரம் பதமடைந்து எவ்வளவு விஸ்தாரமும் அடைந்திருக்கிறது என்பதைக் கண்டு வியந்தோம்.

"இப்போதெல்லாம் மூன்று ஸ்தாயிகளில் பாடுகிறவர்களே இல்லை" என்று யாரோ ஒரு உபந்நியாசக வித்வான் சொன்னாரல்லவா? அதைப் பொய்ப்படுத்துவதற்காகவே செய்தது போல்,

ஜி.என்.பி. அன்று சில வேலைகளைச் செய்தார். பைரவி ராக ஆலாபனையில் தார ஸ்தாயி மத்திய மத்தில் நின்று அவர் சஞ்சரித்தபோது, சபையோர் "ஹா ஹா" என்றார்கள்.

பிறகு, பஞ்சமத்துக்குப் போய்க் கார்வை கொடுத்து நின்றபோது 'ஹா ஹா ஹா' என்றார்கள். அத்துடன் ஜி.என்.பி. கீழே இறங்கினாரா? இல்லை! மேலே, தைவதத்துக்குப் போனார். எல்லாருக்கும் மூச்சு நின்று விடும்போல் ஆகி விட்டது. இன்னும் மேலே சென்று அவர் நிஷாதத்தைப் பிடித்ததும் எல்லாருக்கும் மூச்சே நின்று போய் விட்டது! பாடகர் கீழே இறங்கி வந்த பிறகுதான் சபையோர் ஹாய்யாக மூச்சு விட்டார்கள்.

பாலக்காட்டு மணி எந்த வித்வானுக்குப் பக்கவாத்தியம் வாசித்தாலும், கச்சேரி சிறப்பாகி விடுகிறது என்பதில் இரகசியம் ஒன்றுமில்லை. என்றாலும், ஜி.என்.பி.யின் பாட்டுக்கும் மணியின் மிருதங்கத்துக்கும் விசேஷ பொருத்தம் இருக்கிறதென்பதும் உண்மையேயாகும். ஜி.என்.பி.யும் மணியும் சேரும் கச்சேரிகளில் பாட்டுக்கு மிருதங்கமும், மிருதங்கத்துக்குப் பாட்டும் ஒன்றுக்கொன்று சோபை அளிக்கின்றன. பாட்டும் பக்கவாத்தியமும் அவ்வளவு ஒற்றுமையாகச் சேர்வது மிகவும் அருமையென்றே சொல்ல வேண்டும்.

அழகுக்கு அழகு செய்வதுபோல், ஸ்ரீ சௌடய்யாவின் கம்பீர பிடில் நாதமும் ஸ்ரீ வேணு நாயக்கரின் ஜிலுஜிலுப்பான கஞ்சிரா ஒலியும் மேற்படி கச்சேரியை நன்கு சிறப்பித்தன.

**(கல்கி, ஆகஸ்ட் 20, 1944)**

# சோலைமலை இளவரசி தோன்றிய கதை!

செந்தமிழ் நாட்டில் பாய்ந்து வளப்படுத்தும் நதிக்கரைகளின் வழியாகப் பிரயாணம் செய்யும்போதெல்லாம் நம்முடைய உள்ளம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் போய் விடுகிறது. காவேரி, வைகை, தாமிரபரணி கெடிலம், பெண்ணை, பாலாறு ஆகிய நதிகளின் கரைகளில் எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் மக்கள் சிறப்படைந்திருக்க வேண்டும்! எத்தனை குருகுலங்கள் நடந்திருக்க வேண்டும்! எத்தனை கவிஞர்களும் புலவர்களும் பூங்குயில் கூவும் மாந்தோப்புகளின் நிழலில் அமர்ந்து தமிழ்க் கவிதைகளின் இன்பத்தை அநுபவித்திருக்க வேண்டும்! எத்தனை செல்வர்களும் வள்ளல்களும் அந்த நதிக்கரைகளில் வாழ்ந்து பெயரும் புகழும் அடைந்திருக்க வேண்டும்!



தமிழகத்திலுள்ள மலைகளையும் குன்றுகளையும் மொட்டைப் பாறைகளையும் இடிந்த கோட்டை கொத்தளங்களையும் பார்க்கும்போதெல்லாம் நம்முடைய உள்ளம் பழந்தமிழ் நாட்டு அரசர் - அரசிகளின் வாழ்க்கையைக் குறித்துச் சிந்தனை செய்யத் தொடங்குகிறது. யானை குதிரைகளும் கத்தி கேடயங்களும் வேல்களும் ஈட்டிகளும்

பூச்சக்கரக் குடைகளும் தந்தப் பல்லக்குகளும் மனக் கண்ணின் முன்னால் காட்சி தருகின்றன. இத்தகைய சந்தோஷமான காட்சிகள் மட்டுந்தானா? போர்க்களங்களும் படுகொலைகளும் வீரச் செயல்களும் வஞ்சனைகளும் இரத்த ஆறுகளும் கண்ணீர்ப் பிரவாகங்களும் கூடவே தொடர்ந்து வருகின்றன. பழந் தமிழ் நாட்டில் மலைகளிலும் குன்றுகளிலும் கோட்டை கொத்தளங்கள் அமைத்துக் கொண்டு வாழ்ந்த வீர மன்னர்களின் வாழ்க்கைச் சரிதங்கள் எல்லாம் சரிவர எழுதப் பட்டிருக்குமாயின்!... ஆகா! எத்தனை எத்தனை பெரிய பெரிய புத்தகங்கள் ஆகியிருக்கும்! ஒரு பெரிய புத்தகசாலையை நிரப்பி விடுவதற்கு அவை போதுமானவையாயிருக்குமே!

**1947**-ஆம் வருஷத்தில் எட்டயபுரம் பாரதியார் ஞாபகார்த்த மண்டபத்தின் திறப்பு விழா நடத்த வேண்டியிருந்ததை முன்னிட்டு திருநெல்வேலி - ராமநாதபுரம் ஜில்லாக்களில் நான் சுற்றி அலைய வேண்டியிருந்தது. இந்தப் பிரயாணங்களின் போது இரண்டு வகையான எண்ணங்கள் என் உள்ளத்தில் புகுந்து குமுறிக் கொண்டிருந்தன. குன்றுகளையும் பாறைகளையும் பழைய காலத்துக் கட்டடங்களையும் பார்க்கும்போதெல்லாம் அவ்விடங்களில் ஒரு காலத்தில் வாழ்ந்து செழித்திருக்கக்கூடிய சிற்றரசர்களின் வாழ்க்கை எப்படியிருந்திருக்கும் என்று மனம் கற்பனை செய்யத் தொடங்கும்.

அதே சமயத்தில் என்னுடன் பிரயாணம் செய்த நண்பர்கள், 1942-ஆகஸ்டு இயக்கத்தின்போது ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த தேச பக்த இளைஞர்கள் எத்தனை எத்தனை தீரச் செயல்களைப் புரிந்தார்கள் என்று சொல்லிக் கொண்டு வந்தார்கள். அந்த விவரங்கள் எல்லாம் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. தமிழ்நாட்டு வீரப் பரம்பரையில் வந்த வாலிபர்களிடம் இன்னமும் இத்தகைய அதிசயமான தீரச் செயல்கள் புரியும் ஆற்றல் இருக்கிறதல்லவா என்று எண்ணி எண்ணி வியந்தேன்.

இந்த இருவகை எண்ணப் போக்கின் பயனாக எழுந்தது 'சோலைமலை இளவரசி' என்னும் கதை.

1942-ஆம் வருஷத்துப் புரட்சி வீரன் குமாரலிங்கம் போலீஸாரிடம் அகப்படாமலிருக்கும் பொருட்டுச் சோலைமலைக்குப் போகிறான். அங்கே இடிந்து பாழடைந்து கிடந்த பழைய காலத்து மாளிகையொன்றில் படுத்து இரவைக் கழிக்கிறான். பழைய காலத்து மாளிகையின் சூழ்நிலை அவனுக்குச் சில அபூர்வமான அநுபவங்களின் நினைவுகளை உண்டாக்குகிறது. அந்த நினைவுகள் கனவில் ஏற்பட்ட தோற்றமா, அல்லது கற்பனா சக்தியின் விளைவா, அல்லது உண்மையிலேயே பூர்வ ஜன்மத்தின் நினைவுகள்தானா என்பது குமாரலிங்கத்துக்கே தெரியவில்லை. ஆனால் அந்த அநுபவங்கள் புற உலகத்தில் நிகழும் சம்பவங்களைக் காட்டிலும் அவனுக்கு உண்மை வாய்ந்தனவாகத் தோன்றுகின்றன. பூர்வ ஜன்ம நினைவுகளையொட்டி இந்த ஜன்மத்து நிகழ்ச்சிகளும் ஏற்பட்டு வருகின்றன.

இனி, கதையைப் படிக்கத் தொடங்குமாறு அன்பார்ந்த நேயர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்தக் கதைக்கு காரண புருஷர்களாயும் உண்மையில் கதாநாயகர்களாயும் உள்ள 1942-ஆம் வருஷத்து வீர சுதந்திர வாலிபர்களுக்கெல்லாம் வணக்கம் செலுத்தி விட்டு, இதோ நானே கதையை மீண்டும் ஒரு முறை படிக்க ஆரம்பிக்கிறேன்.

**('சோலைமலை இளவரசி' நூலுக்கு அமரர் கல்கி எழுதிய முன்னுரை)**

• மன்ற நிலத்தில் நாற்று நடும் மன்ற உறுப்பினர்கள்

# "எங்கள் கிராமத்துத் தீப்பொறி எங்கும் பரவணும்!"



• சாவித்திரி

'எங்களாலும் முடியும்!' என்று சாதித்துக் காட்டியிருக்கிறார்கள் கண்டமானடி கிராமத்துப் பெண்கள். சிக்கனம் சேமிப்பைத் தரும்; சேமிப்பு வாழ்க்கை வளத்தைத் தரும் என்று சொல்லாமல், செயலில் சாதித்திருக்கிறார்கள் இவர்கள்.

விழுப்புரத்துக்கு அருகில் இருக்கும் இந்த கிராமத்துப் பெண்கள் முதலில் மகளிர் மன்றம் ஒன்றை ஆரம்பித்து, ஆளுக்கு மாதம் பத்து ரூபாய் என்று சேமிக்க ஆரம்பித்து, பிறகு படிப்படியாக உயர்ந்து இப்போது மாதம் நூறு ரூபாய் என்று சேமிக்கிறார்கள்.

மாதா மாதம் சேமிக்கும் பணத்தை ஒட்டுமொத்தமாக வங்கியில் போடுகிறார்கள். இந்தத் தொகை கடந்த சில ஆண்டுகளில் ஒரு லட்சம் ரூபாய் அளவுக்கு வளர்ந்திருக்கிறது.

இது தவிர, ஊருக்குள் யாருக்காவது கடன் தேவைப்பட்டால் இரண்டு சதம் வட்டி என்கிற நிபந்தனையில் கடனும் தருகிறார்கள்.

"அது சரி, கடன் வாங்குபவர்களிடமிருந்து வசூலிப்பது மிகுந்த சிரமமாயிற்றே! அதுவும் நீங்கள் பெண்களாக இருப்பதால் உங்களால்

என்ன செய்துவிட முடியும் என்று சிலர் ஏமாற்றவும் பார்ப்பார்களே?"

"அதுதான் நடக்காது! யாரிடமும் வசூலிக்காமல் விட்டதில்லை!" என்கிறார் மன்றத்தின் தலைவி சாவித்திரி.

"சேமிப்பது, வட்டிக்கு விடுவது மட்டும்தானா செய்கிறீர்கள்?"

"என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்! எங்கள் ஊரில் கால்நடை மருத்துவமனை ஏற்படுத்துவதற்கு அரசு நிதி ஒதுக்கியது. இதைப் பக்கத்து ஊர்க்காரர்கள் எப்படியாவது தங்கள் ஊருக்குக் கொண்டு சென்று விட வேண்டுமென்று முயற்சி செய்தார்கள். ஆனால் நாங்கள் விடவில்லை. மாவட்ட கலெக்டர் வரை சென்று முறையிட்டோம். கால்நடை மருத்துமனை கட்டுவதற்கான இடத்தை எங்கள் மகளிர் மன்றத்தின் சேமிப்பின் மூலம் வாங்கிக் கொடுத்து, மருத்துவமனை வருவதற்கு ஏற்பாடு செய்தோம்.

"எங்கள் மன்றத்தின் சேமிப்புத் தொகையைக் கொண்டு, ஊருக்கு வெளியே இரண்டு ஏக்கர் நிலம் வாங்கி விவசாயமும் செய்து வருகிறோம். ஏர் உழுவது, நாற்று நடுவது என்று எல்லா வேலைகளையும் எங்கள் மன்றத்துப் பெண்களேதான் செய்து வருகிறோம். அறுவடைக்கு மட்டும்தான் வெளி ஆட்களை அழைத்துக் கொண்டு வருவோம்.

"இப்படி நாங்கள் எல்லோருமே முழுக்க முழுக்க மன்ற வேலைகளைத்தான் கவனிக்கிறோம்; வீட்டுப் பொறுப்புகளைக் கவனிப்பதில்லை என்றும் யாரும் சொல்லிவிட முடியாது.

"வீட்டு வேலைகள், அவரவர் தோட்ட வேலைகள் செய்வதோடு சிலர் பக்கத்திலுள்ள மில்லுக்கும் வேலைக்குச் சென்று வருகிறார்கள். எங்கள் மன்றப் பெண்களின் பொறுப்புணர்வு காரணமாக, மளிகைக் கடை, டெய்லரிங் ஷாப் போன்ற சுய தொழில்கள் தொடங்குவதற்குக் கடன் தரவும் பலரும் தயாராக இருக்கிறார்கள். அப்படிக் கடன் பெற்றுச் சுய தொழில் செய்து கொண்டிருப்பவர்களும் உண்டு!" என்கிறார் சாவித்திரி.

இவை மாத்திரமல்ல; அரசியல் செல்வாக்கோடு இந்த கிராமத்தில் நடந்து கொண்டிருந்த கள்ளச்சாராய வியாபாரமும் இவர்களின் விடா முயற்சியால் அடியோடு ஒழிக்கப்பட்டிருக்கிறது.

பக்கத்து கிராமங்களில் கள்ளச் சாராயம் இருக்காதா? அங்கே போய் ஆண்கள் குடிக்க மாட்டார்களா என்று கேட்டால், "எங்கள் கிராமப் பெண்களிடம் ஏற்பட்டிருக்கிற இந்தச் சின்னத் தீப்பொறி கொஞ்சம் கொஞ்சமாக எல்லா கிராமத்துப் பெண்களிடமும் ஏற்பட்டால் எதுதான் சாத்தியமில்லை?" என்கிறார் சாவித்திரி. ○

படங்கள், சந்திப்பு: **ஞானசேகரன்**

---

**"தீபாவளிக்கு வந்த உங்க வீட்டு மாப்பிள்ளை... வந்தே மாதரம்னு மகிழ்ச்சியில் கத்தறாரே...ஏன்?"**

**"நாசமா போச்சு... எங்க அப்பா... அவருக்கு, தீபாவளிக்கு மோதிரம் பண்ணிப் போட்டு விட்டதால் "வந்ததே மோதிரம்"னு மகிழ்ச்சியில் கத்தறார்..."**

**– இரா. திலீப்**





"என்ன கபாலி! இந்த மாத மாமூல் தொகையிலே கொஞ்சம் குறையுதே!"

"அது விழாக்கால சிறப்புத் தள்ளுபடி எசமான்!"

– யமுனா ரெங்கநாதன்

# 11

பெங்களூர் விமான நிலையத்தில் இறங்கின உடன் சோனாலியை சந்தித்து, அவளை அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றார் ப்ரபாகர்ராவ்.

"நல்லவேளை திரும்பி வந்திங்க" என்றார்.

"எங்க போவேன்" என்று பெரிய விழிகளை உருட்டிக் கேட்டாள். சங்கர் எச்சில் விழுங்கிக் கொண்டார். சோனாலி அணிந்திருந்த நவீன உடை அபாயகரமான இடங்களில் திறந்திருந்தது. அவருடைய போலீஸ் கடமைகளை கவனம் கலைத்தது. அவரை நோக்கி, மோகனமாக ஒரு புன்னகையை அவள் வீச, அவளுக்காக இடது கையை வெட்டிக் கொடுக்கலாம் என்று எண்ணினார். அந்த எண்ணத்தை ஏறக்குறையப் படித்து விட்ட ப்ரபாகர்ராவ் சங்கரைப் பார்த்து முறைக்க,

''சொல்லுங்க. எதுக்காகத் துப்பாக்கி வாங்கினீங்க?'' என்றார் சங்கர், அவசரமாக.

"ஆனந்த்தான் வாங்கச் சொன்னார்!"

பாதி கோப்பை தேனீரிலிருந்து நிமிர்ந்த ப்ரபாகர்ராவின் மேல் பாணம் சிந்தி விட்டது.

"ஆனந்தா!?"

''ஆமாம், அவர்தான்! 'எனக்கு ஒரு துப்பாக்கி வாங்கணும். கடைக்குப் போக நேரமே இல்லை. அதனால நீ வாங்கி வா'ன்னு சொன்னார்.''

"எதுக்காகன்னு சொன்னாரா?"

''சொல்லலை. என்னவோ பரிசோதனையோ என்னவோ! சொன்ன மாதிரி



# ஆர்யபட்டா

இருந்தது. அப்ப நானும் டாக்டர் ஆனந்தும் மற்ற விஷயங்களில் கவனமா இருந்ததால."

"மற்ற விஷயம்னா?"

"காதல், ஸ்வீட் நத்திங்ஸ். 'உங்களுக்கு ஐஸ்க்ரீம் பிடிக்குமா வெள்ளரிக்கா பிடிக்குமா?' இந்த ஸ்டேஜ்ல இருந்ததால அவர் என்ன ஆணை பிறப்பித்தாலும் செய்யத் தயாராக இருந்தேன். துப்பாக்கியா, ஏன், புலிப்பால்கூட கொண்டு தந்திருப்பேன்." அவள் தன் கூரிய விரல் நகங்களைப் பார்த்துக் கொண்டு தொடர்ந்தாள். "துப்பாக்கி வாங்கறதில உள்ள அபாயத்தை இப்பத்தான் தெரிஞ்சுக்கிட்டேன். சாதாரணமா விலாசம், கையெழுத்துப் போட்டபோது அதில இவ்வளவு சிக்கல் இருக்கும்னு நான் எதிர்பார்க்கவே இல்லை."

"அதாவது நீங்க அந்தத் துப்பாக்கிய ஆனந்த்கிட்ட கொடுத்திங்க?"

"ஆமாம்."

"உங்ககிட்ட வெச்சுக்கவே இல்லை."

"இல்லை. ஒருநா கூட வெச்சுக்கலை."

சங்கர், உண்மை சொல்றான்னா 'இது ஒரு புது திருப்பம்' என்று ஒரு காகிதத்தில் எழுதி ப்ரபாகர் ராவிடம் காட்டினார்.

அவர் தலையசைத்து ஆமோதித்தார்.

"ஸார் நான் போகலாமா, வேற எதாவது கேட்கணுமா?"

"நீங்க துப்பாக்கியை வாங்கி ஆனந்திடம் கொடுத்ததுக்கு – ஆதாரம், சாட்சியம் ஏதாவது இருக்குதா?"

"துப்பாக்கியை வெச்சுக்கிட்டு என்ன செய்வேங்க! அதனுடைய பிசினஸ் முனையே தெரியாதவள் நான்."

"பிசினஸ் முனை? சேஸ் நாவல் நிறைய படிப்பீங்க போல. சிங்கப்பூர் ட்ரிப் எப்படி இருந்தது?"

"பிரமாதம், லீன்னு ஒருத்தர். என்னை இந்த நிமிஷமே கல்யாணம் செய்து கொள்கிறாயா என்று கேட்டார். நான்தான் ஊர்ல என்மேல கொலைக்குற்றம் எல்லாம் இருக்கு. அந்தப் பிரச்னையைத் தீர்த்து வைத்து விட்டு வருகிறேன், என்று சொன்னேன்" என்று சிரித்தாள். "நடராஜ்'னு ஒரு பள்ளி துவங்கி கெஸ்ட் லெக்சர் கொடுக்கக் கூப்பிட்டிருக்காங்க."

"குட்!"

"நல்லவேளை நான் ஆனந்தை கல்யாணம் செய்துக்கலை. கடவுள் ஒரு விதத்தில நல்லதுதான் செய்திருக்கார். அவர் பாரதியை கல்யாணம் செய்துக்கிட்டபோது தற்கொலைவரை கூட போய்ட்டேன். பைத்தியக்காரி நான்!"

"ஆனந்த் தற்கொலை செய்துக்கிட்டு இருப்பாரா?"

"சேச்சே! ஆனந்த் அப்படிப்பட்ட பர்சனாலிட்டியே இல்லை!"

"ஆபிஸ்ல ஏமாற்றம், ப்ரமோஷன் ரெகக்னிஷன் கிடைக்காத ஏமாற்றம்?"

"ம்ஹூம். அப்படிப்பட்ட ஆளில்லை அவர்" என்று சொல்லிவிட்டு "மிஸ்டர் சங்கர், உங்களை யூனிபார்ம் போடாம பார்க்க விரும்பறேன்" என்றாள்.

அவள் போன திசையை சங்கர் வியக்க, "சரியான பெண்ணப்பா அது" என்றார் ப்ரபாகர்ராவ். "உனக்குக் கல்யாணம் ஆகலைன்னு எப்படியோ தெரிஞ்சு போச்சு இவளுக்கு" என்றார்.

**மா**லையில் வீடு திரும்பும்போது **விதான் சபாவில் அமளி! சைன்டிஸ்ட் கொலை வழக்கு எதிரொலி!** என்று பெரிய எழுத்தில் தலைப்புடன் செய்தித்தாளை ஒரு பெண்மணி கைக்குழந்தையுடன் போக்குவரத்தின் ஊடே நடந்து விற்றுக் கொண்டிருந்தாள்.

ப்ரபாகர்ராவ் ஜீப்பிலிருந்தே இரண்டு ரூபாய் கொடுத்து அதை வாங்கிப் பார்த்தார்.

*விஞ்ஞானி ஆனந்த் கொலை வழக்கில் போலீஸ் எதுவும் கண்டுபிடிக்காமல் இருந்ததற்கு அதிருப்தி தெரிவிக்கும் வகையில் சட்டசபை நடவடிக்கைகள் – இன்று முழுவதும் ஸ்தம்பித்துப் போயின.*

*முதலமைச்சர் அவையில் இல்லாதது எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் கோபத்தை அதிகரிக்க, உள்துறை அமைச்சர் ஆவன*

சுஜாதா

செய்து கொண்டிருக்கிறோம் என்று சொன்னபோது, அவையில் சலசலப்பு ஏற்பட்டு மைக்குகள் பிடுங்கப்பட்டு நாற்காலிகள் பறந்தன. பின்னர் – முதலமைச்சர் ஒரு ஜப்பானிய குழுவுடன், ஒப்பந்தத்திலிருந்து பிரிந்து வந்து, சபையில் சற்று விவரமான அறிக்கை கொடுத்தார்:

போலீஸ் மிக விரைவில் குற்றவாளியைக் கண்டுபிடித்துக் கைது செய்யும். ஆனந்த் கொலை வழக்கில் சதியோ, வெளிநாடுகளின் வேலையோ எதுவுமே இல்லை. இது, முதல் விவரங்களின்படி ஒரு உணர்ச்சி பூர்வமான குற்றம் என்பது தெரிந்திருக்கிறது. போலீஸ் சுறுசுறுப்பாக சில துப்புகளை தொடர்ந்து கொண்டிருக்கும் வேளையில் பெயர்கள் அறிவிக்கப்பட்டால் வழக்கின் முன்னேற்றம் பாதிக்கப்படும்.

"நல்லா மழுப்பிருக்கார்" என்றார் ப்ரபாகர், டிரைவரிடம்.

வீடு வந்தபோது சடையன் என்னும் அவருடைய காக்கர்ஸ்பானியல் அவர் மேல் துள்ளி விளையாடினதை கவனிக்காமல் "சாந்தலா ஏதாவது போன் வந்துச்சா?"

"எட்டுத் தடவை போன். 'முதலமைச்சர் பிஏகிட்டருந்து. கமிசனர்கிட்டருந்து. ஐஜிகிட்டருந்து. எங்கு போய்ட்டீங்க?"

"ஏர்போர்ட் போயிருந்தேன்!"

முதலமைச்சர் செயலாளருக்கு போன் போட்டபோது கமிஷனர் அங்கேதான் இருந்தார்.

"என்ன ப்ராபகர்ராவ், பேப்பர் பாத்தீங்களா?"

"பாத்தேன் ஸார். பெரிய ரகளை மாதிரி தெரியுது?"

"எல்லாத்துக்கும் நீங்கதான் காரணம். தெரியுதா?"

ப்ரபாகர்ராவின் தாடைகள் இறுகின.

"நாங்க எங்களால ஆனதை செய்துக்கிட்டிருக்கோம் ஸார். ஒரு நாளைக்கு இருபத்து நாலு மணி நேரம்!"

"போதாது போதாது! சட்டசபையில கூச்சல் போடறாங்க. சிஎம் கூச்சல் போடறார். உங்களுக்கெல்லாம் எதுக்கு சம்பளம் கொடுத்து வச்சிருக்குன்னு என்னை கேக்கறார். ராத்திரிக்குள்ள யாரையாவது அரஸ்ட்டு பண்ண முடியுமா முடியாதா?'

ப்ரபாகர்ராவ் யோசித்து பதில் சொன்னார்.

"முடியாது ஸார்! அது போலீஸ் முறைப்படி நியாயமில்லை. இப்ப இது சூய்சைடாக்

# இடம் தெரியாத எம்.பிக்கள்!

டெல்லிக்குப் போயிருக்கும் எம்.பிக்களில் சிலருக்கு ராஜ்ய சபாவும் லோக் சபாவும் வேறு வேறு என்பது கூடத் தெரியவில்லை. கேரளாவிலிருந்து பி.சங்கரன் என்பவர் இந்திரா காங்கிரஸ் சார்பில் லோக் சபாவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். லோக் சபாவிற்கு அருகிலிருக்கும் ஒரு அறையில் சங்கரன் உட்கார்ந்து இருந்தார். சபாநாயகர், அவரது பெயரைச் சொல்லி அழைத்து, சபையில் பேசுவதற்கு அழைத்தார்.



சங்கரன் அவசர அவசரமாக சபைக்குள் நுழைந்து, தமது மாநிலத்தில் தேங்காய்க்கு வந்திருக்கும் அவல நிலையை ஆவேசமாக எடுத்துச் சொன்னார்.

பேச்சின் முடிவில், சபைத் தலைவருக்கு அருகில் சென்று தமது ஆதங்கத்தை எடுத்து வைத்தார். சபைத் தலைவர், லோக் சபை நாயகரான யோகி அல்ல... மாறாக, ராஜ்ய சபைத் தலைவரான கிருஷ்ணகாந்த், நாற்காலியில் அமர்ந்து இருந்தார்.

ராஜ்ய சபை உறுப்பினர்கள், புதியதாக வந்து தோன்றிய உறுப்பினர் சங்கரனை ஒரு விதமாகப் பார்க்கத் தொடங்கினார்கள்.

சங்கரனுக்குத் தவறு புரிந்து விட்டது. விழுந்தடித்துக் கொண்டு லோக் சபைக்குள் நுழைந்தார். அங்கும் தேங்காய்க்கு உண்டான பிரச்சினையை உணர்ச்சிகரமாக எடுத்து உரைத்தார்.!

இந்தி சினிமா நடிகை சபனா அஸ்மி, ராஜ்ய சபாவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவர், ராஜ்ய சபாவிற்குப் போவதற்குப் பதிலாக லோக் சபாவிற்கு அருகில் சுற்றிச் சுற்றி வந்தார்.

சபனா பேச ஆரம்பித்தால்... அலறியடித்துக் கொண்டு அவர் பேசத் தொடங்குவதற்கு முன்னாலேயே அவரை ராஜ்ய சபாவிற்குள் அழைத்துச் சென்று விட்டார்கள்!

– சேலம் சக்திக்கொடி

கூட இருக்கலாம்னு ஒரு புதிய திருப்பம் வந்திருக்கு!''

''அப்ப நான் ப்ரஸ்ஸை கூப்பிட்டு சொல்லிடட்டுமா? தற்கொலைன்னு?''

''இல்லை ஸார். கொஞ்சம் அவகாசம் கொடுங்க.''

''என்னய்யா அவகாசம்! ஆனந்த் இறந்து போய் மூணு மாதம் ஆறது.''

''ஒரு மாதம் ஸார்!''

ஒரு மாதம் போதாதா ராவ்! உங்ககிட்ட இதை முதல்ல ஒப்படைச்சதே தப்புன்னு இப்ப தோணுது. கொஞ்சம் இருங்க, சி.எம் கூப்பிடறாரு. ராவ் நான் உங்ககூட மறுபடி பேசறேன்'' என்று போனை வைத்து விட்டார்.

சாந்தலா அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். கவலை ரேகைகள்!

''என்னங்க!''

''யாரையாவது அரஸ்ட் பண்ணனும்னா எப்படி? யாரைப் பண்றது. ரோடில போற பிச்சைக்காரனையா?''

சங்கருக்கு போன் செய்தார். ''சங்கர், அரசியல் முழுசா உள்ள நுழைஞ்சுருச்சு. கேஸ் தலைக்கு மேல போய், இப்ப நாம் இரண்டு பேர்ல ஒருத்தரைக் கைது பண்ற நிலையில இருக்கமா! சோமசுந்தர் அல்லது சோனாலி?''

''ஸார், கேசில ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டிருக்கு?''

''சுய்சைடுதானே. யாரும் நம்ப மாட்டாங்க. எண்ட்ரி ஊண்டு தூரத்திலிருந்து சுட்டாப்பலதான் ரிப்போர்ட் இருக்கு. பாத்துட்டேன்.''

''அதில்லை ஸார். ஒரு விவரத்தை நாம ஓவர் லுக் பண்ணிட்டோம். பாரதிகூட இருந்தாரே 'முன்னா'ன்னு... அவளுடைய அத்தை மகனோ, மாமன் மகனோ''

''ஆமாம்.''

''அவர் பேரு என்னங்கறிங்க?''

''சேகர்னான்.''

''முழுப்பேரு சோமசேகர்! அவருடைய டிபசிஷனை இன்னிக்குத்தான் பார்த்தேன்.''

''சோமசேகர்?''

''ஆமாம். டாக்டர் சோமசுந்தர் சொன்னார் பாருங்க, என்னை யாரும் 'சோமு'ன்னு கூப்பிட்டதே இல்லைன்னு. அது சரிதான்னு விசாரிச்சுட்டேன்.''

''அப்டின்னா சோமுங்கறது...''

''இந்த முன்னா அல்லது சேகர் எனப் படும் சோமசேகரா இருந்தா?''

''இவருடைய அலிபையை பார்த்தமா?''



**''நாட்டில் எது எதுக்கு சங்கம் அமைக்கிறதுனு ஒரு விவஸ்தையே இல்லாமப் போயிடுச்சுங்க.''**

**''ஏன்? என்னாச்சு?''**

**''பின்னே! திருடனுங்க ஒண்ணு சேர்ந்து, போலீஸில் 'மாமூலை'க் குறைக்கணும்னு போராட சங்கம் அமைக்கறாங்களாமே!''**

**– பொள்ளாச்சி கே. சித்ரா**

''இன்னும் இல்லை. பாரதி கூடவே இருந்தான், அந்தப் பையன். ஆறுதல் சொல்லி தலையை தடவிக்கிட்டு ஞாபகம் இருக்கா? முறைப்பையன். பாரதிமேல ஒரு இது. இப்படி யோசிக்க சந்தர்ப்பம் இருக்கறப்ப...''

''**வா**ங்க'' என்றான் முன்னா என்கிற சேகர்.

''மிஸ்டர் சோமசேகர்! அதான உங்க முழுப்பேரு?''

''ஆமா.''

''அதை ஏன் எங்கிட்ட சொல்லவே இல்லை?''

''நீங்க கேக்கலையே.''

''உங்களை சில கேள்விகள் கேட்க விரும்பறோம்.''

''தாராளமா.''

''உங்களை 'சோமு'ன்னு கூப்பிடுவாங்களா?''

''ஆனந்த் எப்படி கூப்பிடுவார்?''

''சோமுன்னுதான்.'' சற்று தயக்கத்துடன் கண்கள் சரிய உடனே சுதாரித்துக் கொண்டு, அவன் வசிகரமாகச் சிரித்தான்.

''என்ன ஸார் என்னை சந்தேகப் படறிங்களா?

(தொடரும்)

# 10 கட்டளைகள்

# டீவிக்கும் காற்றோட்டம் தேவை!

**"இவ்வளவு பணம் கொடுத்து டீ.வி. செட்டை வாங்கினால், திரையில் உருவங்கள் தெளிவாகத் தெரியலியே?" என்ற அங்கலாய்ப்பு கணிசமான வீடுகளில் எழுவதுண்டு. மெக்கானிக்கை கூப்பிட்டு டீ.வி.யின் பாகங்களை சரிபார்ப்பதற்கு முன், சில விஷயங்களில் கவனம் செலுத்தியிருக்கிறீர்களா என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்.**

- டீ.வி., வி.சி.ஆர்., ஸ்டெப் லைஸர் போன்ற பலவற்றுக்கும் ஒரே பாயிண்ட்டில் மின் இணைப்பு கொடுப்பதைத் தவிர்ப்பது நல்லது. காரணம் ப்ளக் லேசாக அசைந்தால் கூட திரையில் பிம்பங்கள் கலங்கலாகத் தெரியக்கூடும்.

- பல ஆயிரங்கள் கொடுத்து டீ.வி. செட் வாங்கும் போது, அதற்கு மின் இணைப்பு கொடுக்கும் ப்ளக்கும் தரமானதாக, புதியதாக இருக்கட்டும். ப்ளக்கிற்குள் மண் அல்லது குளவிக்கூடு என்றால் மின் இணைப்பு சீராக இருக்காது. "செட்டை தட்டினால் படம் வருது; விட்டால் போகுது" எனும் ஆச்சர்யத்துக்கு பெரும்பாலும் இதுதான் காரணமாக இருக்கும்.



- டீ.வி.செட்டின் பின்புறம் நிறைய துவாரங்கள் இருக்கும். உள்ளே இருக்கும் வெப்பம் வெளியேறத்தான் அவை உள்ளன. எனவே டீ.வி.யின் மீது துணியைப் போட்டு மூடுபவர்கள், அது 'ஆன்' செய்யப்படும் போதாவது அந்தத் துணியை நீக்கிவிடுவது நல்லது.

- தரம் வாய்ந்த ஆன்டனாக்களையே பொருத்துங்கள். இல்லையென்றால் உருவங்கள் - முக்கியமாக சென்னையிலிருந்து தள்ளியிருப்பவர்களுக்குக் குறைபாடுகளோடுதான் காட்சியளிக்கும்.

- ஆன்டனாவை பொருத்தும் விதமும் வெகு முக்கியம். டீ.வி. டவர் இருக்கும் திசையை நோக்கி ஆன்டனாவில் உள்ள குறைந்த நீளமுள்ள தண்டு (டீ.வி. டவருக்கு இணையாக) இருக்குமாறு பொருத்துங்கள்.

- ஆன்டனாவை சரியாகப் பொருத்தினால் கூட வேகமான காற்று அல்லது காக்கைகள் காரணமாக ஆன்டனா திசை மாறலாம்; திரையில் உருவங்கள் தெளிவில்லாமல் போகலாம். ஆன்டனாவை உறுதியாக, சரியான திசையிலேயே பொருத்துங்கள்.

- அவ்வப்போது, இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை - ஆன்டனாவில், ஒயர்கள் சேருமிடத்தில் உள்ள அலுமினிய பகுதியை நன்றாக, அழுக்குப் போக துணியாலோ, உப்புத்தாளாலோ தேயுங்கள்.

- ஆன்டனாவை பொருத்தும்போது, அதன் அருகில் வாட்டர் டாங்க், சுவர் ஆகிய உயர்ந்த 'இடைஞ்சல்கள்' இருக்க வேண்டாம். அப்படிப்பட்ட இடத்தில் ஆன்டனாவை பொருத்தினால் திரையில் இரட்டை உருவங்கள் தெரியும்.

- கலர் டீ.வி. செட்டுக்கு அருகே காந்தப் பொருள்கள் இருந்தால் திரையில் சில வண்ணங்கள் இணைந்து தோன்றும்.

- டீ.வி.யின் அருகே போதிய காற்றோட்டம் தேவை. எனவே ஷெல்ஃப்புக்குள் டீ.வி. செட்டை வைக்க வேண்டாம். அதே போல் மழைநீர் டீவிக்குள் இறங்காமல் இருக்க, நீர் கசியும் சுவர் மற்றும் ஜன்னலுக்கு அருகேயும் டீவி செட்டை வைக்கக் கூடாது!

— ஜி.எஸ்.எஸ்.



# 'கலைமகள்'



## தீபாவளி மலர் அன்பளிப்பு

## நிரந்தர வருமானம் வரக்கூடிய பண்ணை நிலம் வாங்கிப் பலனடையும் திட்டம்.

**ரூ. 10,000 மதிப்புள்ள பண்ணை நிலத்திற்குச் சொந்தக்காரராகுங்கள்**

**மேலும் அன்பளிப்பாக**

☆ கலைமகள் தீபாவளி மலர் மற்றும் கலைமகள் மாத இதழ் தொடர்ந்து 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.

☆ இலக்கியப் பீடம் காலாண்டிதழ் 5 ஆண்டுகளுக்கு அனுப்பப்படும்.

### அன்னை ஆர்ச்சர்ட்ஸ் நிறுவனத்தாரின் பழப் பண்ணைத் திட்ட விபரங்கள்.

பண்ணை நிலம் (1316 சதுர அடி) நீங்கள் குறிப்பிடும் நபர் பெயரில் உடனடியாகப் பத்திரப் பதிவு செய்து தரப்படும்.

பண்ணை நிலத்தில் ஏற்றுமதித் தரம் வாய்ந்த உயர்தர மாமரக் கன்றுகள் உங்கள் சார்பில் நடப்பட்டு இலவசமாகப் பராமரிக்கப்படும்.

சிறந்த தோட்டக்கலை, விவசாய, பொருளாதார நிபுணர்கள் ஆலோசனைப்படி இத் திட்டம் இயங்கும்.

பயிர்கள் ஆயுள் காப்பீடு செய்யப்படும்.

5 ஆண்டுகளுக்குப் பிறகு பண்ணை நிலம் மூலம் கணிசமான தொகை பலனாகப் பெற வழியுண்டு.

விவசாய வருமானத்திற்கு வருமான வரி கிடையாது.

ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு பண்ணை நிலம் தேவை இல்லை எனில் அன்றைய தேதி விலையில் மறு விற்பனை செய்ய அன்னை ஆர்ச்சர்ட்ஸ் உதவி செய்யும்.

**பண்ணை நிலம் இலவசமாகப் பத்திரப் பதிவு செய்ய வேண்டிய நபரின் பெயர், தந்தை/கணவர் பெயர், வயது, முகவரி மற்றும்**

**தொடர்ந்து கலைமகள், இலக்கியபீடம் பிரதிகள் இலவசமாக அனுப்ப வேண்டிய பெயர், முகவரி, தொலைபேசி எண் ஆகியவற்றைக் குறிப்பிட்டு ரூ. 10,000க்கான செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி**




## Annai Orchards Pvt. Ltd.,

**C1, Bhagyam Palace, 12A, Puliyur First Lane, Trustpuram, Kodambakkam, Chennai - 600 024. Phone: 481 84 35.**


**தவணை முறைத்திட்டமும் உண்டு.**

**இந்தத் திட்டம் தீபாவளிக்குப் பிறகும் தொடரும்.**

இந்த ஆண்டு கலைமகள் தீபாவளி மலரைப் பெற 15.10.98க்குள் விண்ணப்பிக்கவும்.

# சின்ன விஷயங்கள் - பெரிய சாதனைகள்!



**டாக்டர் எம்.எஸ். உதய மூர்த்தி**

கடந்த பத்தாண்டுகளிலே மக்கள் சக்தி இயக்கத்தின் லட்சியமாக நாங்கள் குறிப்பிடுவது மூன்று முக்கிய விஷயங்கள்:

முதலாவதாக சுயவளர்ச்சி. தனிமனிதன் உயர்ந்தால்தான் சமுதாயம் சிறந்ததாக அமையும். தனி மனிதனிடம் காணப்படும் குறைகளைப் போக்கும் நிறை குணங்களை நாம் வளர்க்க வேண்டும். இங்கே பொதுவாக மனிதனிடம் தன்னால் முடியும் என்கிற தன்னம்பிக்கை குறைவு. சார்ந்து நிற்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்கி விட்டோம். அதனால்தான் அதிகம் பேர் பிறரிடம் வேலை செய்து பிழைக்கத் தயாராயிருக்கிறார்களே தவிர, சொந்தக் காலில், ஒரு சொந்தத் தொழிலில் இறங்கத் தயாராயில்லை. தன்னம்பிக்கை இல்லை; துணிவு இல்லை; எதையும் சமாளிப்போம்; சமாளிக்க முடியும் என்ற மனஉறுதி இல்லை.

இந்த சார்ந்து நிற்கும் குணத்தை நமது மத்திய மாநில அரசுகளும் அதிகமாக வளர்த்து விடுகின்றன. இனாம், இலவசம், வேட்டி, புடைவை, வீடு, பல்பொடி, செருப்பு என்று. பல அரசியல்வாதிகளுக்கு 'என்ன செய்கிறோம்? இதன் ஆழம் என்ன? இது எங்கு கொண்டு விடும்?' என்று சிந்திக்கிற திறன் இல்லை. பல பேர் தெரிந்தும், வோட்டுக்கு இனாம் கொடுப்பது நல்லது என்று 'இரந்து பெறும் குணத்தை' மக்களிடம் வளர்த்து வருகிறார்கள்.

எனவேதான் உன்னை நீ முழுமையாக வளர்த்துக் கொள். உன்னிடம் பாரம்பரிய பலம் இருக்கிறது. உன் காலிலே நில். தைரியத்தை, தன்னம்பிக்கையை, மனித உறவுகளை, முடிவெடுக்கும் திறனை வளர்த்துக் கொள் என்கிற சுயவளர்ச்சியை கடந்த 25 ஆண்டுகளுக்கு மேலாக எழுதி வருகிறோம். கடந்த பத்தாண்டுகளாக பயிற்சி முகாம் நடத்துகிறோம்.

இரண்டாவதாக சுய பொருளாதார மேம்பாடு. இவ்வுலகில் வாழ பொருள் தேவை; அதைப் போதிய அளவுக்கு மேல், தனக்கும் இந்த சமுதாயத்திற்குமாக அவன் சம்பாதிக்க முடியும் என்று சொல்கிறோம், விளக்குகிறோம்; பயிற்சி கொடுக்கிறோம். எந்தக் காரியத்திலும் கஷ்டமும் வரும், நஷ்டமும் வரும் என்பதை உணர்ந்து சமாளிக்க முடியும் என்று இறங்குவனுடைய வருமானம் அவன் தீர்மானிப்பதுதான். இது முதலாளி தீர்மானிப்பதல்ல.

சொந்தத் தொழில் செய்பவன் சுதந்தர மனோபாவம் கொண்டவன் - தன் தொழிலில் தன் எல்லாத் திறமைகளுக்கும் வாய்ப்பளிக்கிறான் . சொந்த சாதனையில் மன நிறைவு பெறுகிறான். இதனால் ஊருக்கு அதிக நன்மை செய்ய முடிகிறது! உற்பத்தி செய்பவர்கள் அதிகம் உள்ள நாடுதான் செல்வந்த நாடாக இருக்கிறது.

மூன்றாவதாக, 'சமுதாய ஈடுபாடு கொள்ளுங்கள்' என்று சொல்கிறோம். நாம், இந்தச் சமுதாயத்திலிருந்து பலவற்றையும் பெறுகிறோம் என்பதைப் பலரும் மறந்து விடுகிறார்கள். வளம் மிகுந்தவர்கள் நலிந்தவர்களுக்கு உதவுவதுதான் வாழ்க்கை நெறி உயர் தர்ம நெறி - என்பதைப் பலரும் உணர்வதில்லை. இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளும், ஜடப் பொருள்களும் ஒன்றுக்கொன்று உதவியாகத் தான் படைக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் புரிந்து கொள்வதில்லை. இப் பிரபஞ்சத்திலுள்ள கோள்கள் அனைத்தும் தனித்தும் இயங்குகின்றன, இணைந்தும் இயங்குகின்றன என்கிற உண்மையைப் பெரும்பாலோர் உணர்வதில்லை.

ஒரு காந்தி செய்த சமுதாயப் பணியினால்தான் இந்தியா மாத்திரமல்ல, மற்ற முப்பது நாடுகள் சுதந்தரம் பெற்றன. ஊர் நன்மையில்தான் தனி மனித பாதுகாப்பு இருக்கிறது. சமுதாய ஈடுபாடு என்பது ஒரு நாணயத்தின் மறுபக்கம் ஆகும். இப்படி நடைமுறைக்கேற்ற - தேவையான - முக்கிய மூன்று




• கள்ளச் சாராயத்திற்கு எதிராக 1988-ல் மக்கள் சக்தி இயக்கம் நடத்திய உண்ணாவிரதப் போராட்டம்

கொள்கைகளை இயக்கத்தின் லட்சியங்களாக ஏற்றுக் கொண்டிருக்கிறோம். ஒரு சமுதாயத்தை முழுமையாக உருவாக்கும் லட்சியங்கள் இவை.

இன்றிருக்கும் சமுதாய சீர்கேடுகளைப் பார்க்கும் யாரும் பொதுவாழ்வில் இறங்க அஞ்சுகிறார்கள். காரணம் 'என்னால் என்ன செய்ய முடியும்?' என்பன போன்ற கேள்விகள். இதைவிட மேலாக அவநம்பிக்கை. "இந்த நாடு மாறாது; இதை மாற்ற முடியாது" என்ற அவல எண்ணம். அவ்வளவு ஆழமாகச் சீர்கேடுகள் புரையோடிப் போயிருக்கின்றன. உண்மை தான். ஆனால் நாம் செய்யாவிட்டால் என்ன ஆகும்? நிலைமை இன்னும் மோசமாகும். நாம் செய்யாவிட்டால் யார் செய்வார்கள். அமெரிக்கர்களோ, ஜப்பானியர்களோ வந்து நமக்காக இதை எல்லாம் சீர்திருத்தப் போவதில்லை.

அப்படியானால் ஏன் இறங்கத் தயங்குகிறார்கள்? மறுக்கிறார்கள்?

'முடியாது. என்னால் முடியாது.'

'மாறாது. இந்த நாட்டை மாற்ற முடியாது' – என்ற அவல எண்ணங்கள்தான் காரணம்.

ஆகவே இங்கு நாம் மனிதனின் எண்ண நிலையைச் சரிப்படுத்த வேண்டும்; நம்பிக்கையை ஊட்ட வேண்டும்; அந்த எண்ண நிலையில் ஏற்படும் மாற்றம்தான் நம்பிக்கையாய், செயலாய், பழக்கமாய், ஒரு மனிதனின் குணநலனாய் மாறுகிறது.

இந்த மனமாற்றம் பற்றி நான் சுமார் இரண்டாண்டுகளுக்கு மேல் யோசித்தேன். மனிதனுக்குத் தன்னால் முடியும் என்கிற நம்பிக்கை வேண்டும். அதுதான் சாதனைக்கு விசை. இது நன்றாகப் புரிந்தது.

எனது நண்பர்களிடம் பேசினேன்; எனது இளைஞர்களிடம் சொன்னேன். எல்லோரும் ஏற்றுக் கொண்டார்கள். அதுதான் உண்மை என்று ஒப்புக் கொண்டார்கள்.

பெரிய மாநாடு போட்டு இதைப் பற்றிப் பேச வேண்டும் என்று எண்ணினேன்; எங்கு பார்த்தாலும் இப்படிப்பட்ட போஸ்டர் ஒட்ட வேண்டும் என்று சிந்தனை ஓடியது. உடனே ஒரு மாற்று சிந்தனை: இது என்ன எல்லோருக்கும் தெரியாமலா இருக்கிறது? தெரிந்த விஷயத்தைப் போய்ச் சொல்வானேன்? எல்லாம் தெரிந்தவன் போல இதைப் போய் சொல்வதா? இப்படிப்பட்ட கேள்விகள், சந்தேகங்கள், தயக்கங்கள்.

மனவியல் அறிஞர்கள் சொல்கிறார்கள். "மிகப் பல முக்கிய விஷயங்கள் எல்லாம் சாதாரண விஷயங்கள்தான். எல்லோருக்கும் தெரிந்தவைதான். ஆனால் அவைதான் முக்கியம் என்பதைப் பொதுமக்கள் ஆழமாக உணர்வதில்லை; எனவே சர்வசாதாரணமாக எடுத்துக் கொள்கிறார்கள்; லேசாக எடுத்துக் கொள்கிறார்கள். உபயோகித்து வெற்றி காணலாம் என்கிற தெளிவு இல்லை. எனவே உபயோகிப்பதில்லை என்கிறார்கள்.

உண்மைதான். மகாத்மா காந்தியின் வாழ்வை எடுத்துக் கொள்ளுங்கள். உப்பு சத்தியாக்கிரகம் என்றார்; தண்டி யாத்திரை போகப் போகிறேன் என்றார்.

உப்பு! உப்பு எவ்வளவு சாதாரண விஷயம்!

ஒரு நாளைக்கு எவ்வளவு உப்பு உபயோகிக்கிறோம்?

மிகக் கொஞ்சம்! அதற்குப் போய் வரி போட்டால் என்ன. உப்பின் விலை எவ்வளவு

கூடி விடப் போகிறது? மிகக் கொஞ்சம்!

இதற்காக ஒரு போராட்டமா?

சே! உப்புப் பெறாத விஷயம்! ஏதாவது ஒரு பெரிய விஷயத்தைப் போராட்டத்திற்காக எடுத்துக் கொண்டால் சரி! இந்த மனிதர் வேலை கெட்ட மனிதர்; வேறு விஷயமில்லாத மனிதர் - இப்படித்தான் எண்ணினார்கள் நேருவும், படேலும். சிரித்து, நகைத்து, பரிகாசம் கூட தங்களுக்குள் செய்து கொண்டார்கள்

சாதாரண விஷயம் - அந்த சாதாரண விஷயம்தான் அசாதாரணமான பலனைத் தந்தது. தண்டி யாத்திரை அனைத்து மக்களையும் ஒன்றாக்கியது. அதுதான் சூட்சுமம்.

உப்பு வரி என்று போடப்படும் வரியின் தொகைக்காக அல்ல இந்தப் போராட்டம். ஒரு கொள்கைக்காக. ஒரு நியாயத்திற்காக. அடிப்படை உரிமைக்காக.

அதே போலத்தான் கைராட்டை கதர். சுதேசித் துணி. சின்ன விஷயம்! சாதாரண விஷயம். 'கைராட்டை சுற்றினால் வெள்ளைக்காரன் போய் விடுவானா?' என்று கேட்டார்கள்.

கைராட்டை எல்லோரையும் இணைத்தது. சொந்தமாக நெய்த துணி என்ற மாபெரும் சுய கௌரவத்தை அளித்தது. இதன் விளைவாக மான்செஸ்டரில் பல துணி மில்கள் மூடப் பட்டன.

சாதாரண விஷயம் என்ன செய்கிறது என்பதைக் கவனியுங்கள்!

மூன்றாவதாக அவர் எடுத்துக் கொண்ட சத்தியம், அஹிம்சை.

உண்மை பேசு என்றார் - அவர் உண்மையே பேசினார். உண்மை பேசு என்றுதான் ஆரம்பப் பள்ளியிலிருந்து அரிச்சந்திரன் நாடகம் வரை பார்க்கிறோம். ஆனால் நாம் அதை சீரியசாக - பெரிதாக - முக்கியமானதாக எடுத்துக் கொள்வதில்லை. ஏனெனில் இது தெரிந்த விஷயம்; சாதாரண விஷயம்.

இப்படி 'சாதாரண விஷயம்', 'தெரிந்த விஷயம்தானே' என்று எண்ணுவதன் மூலம் அவற்றை அலட்சியப்படுத்தி விடுகிறது நமது மனம். ஆனால் சின்ன விஷயங்களுக்குள் தான் பெரிய மகிமை அடங்கி இருக்கிறது. எளிமை தான் படாடோபத்தை வெல்கிறது.

சின்ன மந்திரம் 'ஓம்' என்ற நாதம்தான் இப் பிரபஞ்சத்தின் ஒலி. பிரபஞ்சம் உருவாகக் காரணமான ஒலியாக கருதப்படுகிறது. ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் இந்த மந்திரச் சொல்லின் வலிமை பற்றி ஆராய்ந்திருக்கிறார்கள்.

'நம்புங்கள், நம்மால் முடியும்' என்று சொன்னால், பெரிய மேதைதான்' என்று ஏளனம் செய்ய மாட்டார்களா என்கிற எண்ணமெல்லாம் என்னை உள்ளுக்குள்ளே இழுத்துக் கொண்டிருந்தன.

இளைஞர் ஒருவர் எனக்கு உதவியாக கார் ஓட்டிக் கொண்டிருந்தார். பெயரே வைரம் தான். பெரிய இடத்துப் பையன். அவருக்குத் திருமணம் நடந்தது. மயிலாடுதுறையில். போயிருந்தேன். தெருமுனைகளில் எல்லாம் 'நம்பு தம்பி, நம்மால் முடியும்!' என்ற செய்தி துணியில் எழுதப்பட்ட பேனர்களை எங்கு பார்த்தாலும் தொங்க விட்டிருந்தார்கள். இது என் கூச்சத்தைப் போக்கியது; இந்த எண்ணம் என்னுள் வலுப்பட்டது.

விகடனில் இப்படி 'நம்பு தம்பி, நம்மால் முடியும்' என்கிற தலைப்பில் ஒரு தொடர் எழுதினால் என்ன என்று விகடன் ஆசிரியர் உயர்திரு பாலன் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவர் இதை வரவேற்றார். வரவேற்றது மட்டுமல்ல; ஒவ்வொரு கட்டுரையின்போதும் கட்டுரையின் கருத்துகளை என்னுடன் விவாதித்தார்.

இந்தத் தொடரை எழுதி முடிக்கின்ற தருணத்தில்தான் எனது நண்பர் டைரக்டர் பாலசந்தர் ஒரு கடிதம் எழுதி இருந்தார். ''உங்கள் தலைப்பை நான் களவாடிக் கொண்டிருக்கிறேன்!'' என்று.

எழுத்துக்கள் எப்படி எப்படி யார் யாரைத் தொடுகின்றன என்பதைப் பாருங்கள். நான் பதிலுக்கு எழுதினேன். "தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள்! மட்டற்ற மகிழ்ச்சி" என்று.

அவர் என்ன படம் பிடிக்கிறார், கதை என்ன, யார் நடிக்கிறார் என்கிற எந்த விஷயமும் எனக்குத் தெரியாது - இந்த தலைப்பை உபயோகிக்கப் போகிறார் என்பதைத் தவிர.

இந்த வாசகம் விகடனின் முத்திரையையும் பாலசந்திருடைய முத்திரையையும் பெற்று வலிமை கொடுத்தது; பிரபலமாக்கியது.

அதைவிட ஒரு முக்கிய மாற்றமும் பத்திரிகை உலகில் ஏற்பட்டது. 1972லிருந்து விகடனிலும் இதயம் பேசுகிறதிலும் நான் எழுதிக் கொண்டிருந்தபோது, இதன் தாக்கம் மற்ற பத்திரிகைகளையும் தொட்டது. குமுதம் பத்திரிகை ஆசிரியர் எஸ்.ஏ.பி அவர்கள் தமது மனவியல் மொழிபெயர்ப்புத் தொடருக்காக "நினைப்பது முடியும்!" என்று மதுரை போன்ற பெரு நகரங்களில் பெரிய பேனர்களை நிறுவி இருந்தார்கள். எனக்கு சந்தோஷம். இன்று மனவியல் தொடர் இல்லாத பத்திரிகையே இல்லை என்ற ஒரு நிலைக்கு பத்திரிகை உலகம் வந்திருக்கிறது.

நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் இதுதான்.

சின்ன விஷயம் என்பது சின்னது அல்ல.

சாதாரண விஷயம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததாய் இருக்கலாம். ஆனால் அது சாதாரண விஷயமல்ல என்பதுதான்.

இயக்கம் துவங்கியவுடன் நான் செய்த முதல் காரியம் எங்கள் கிராமப் பணிதான். அங்கே எங்கள் ஊரின் முக்கிய பொய்கைக் குளத்திலே தூர் வாரினோம். நான்தான் கிணறு வெட்டியவனாயிற்றே, தூர் வாருவதா பெரிய காரியம்?

ஏ.வி.சி. கல்லூரி மாணவர்களுடன், உள்ளூர் மிராசுதாரர்கள் அளித்த தொழிலாளர்களுடன், இயக்க நண்பர்களுடன் குளத்தை ஆழப்படுத்தி தூர் எடுத்தோம். உடல் நிலை தளர்ந்த நிலையில் இருந்த என் நண்பர் விளநகர் கணேசன் குளக்கரையில் ஒரு சாக்கைப் பிரித்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு நான் மண் சுமப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்து பேசப் போனபோது, "நான் சுமக்க உடல் இடங் கொடுக்கவில்லையே" என்று கண்ணீர் வடித்தார்.

இயக்கம் செய்த இரண்டாவது காரியம் தஞ்சை மாவட்டத்தில் உள்ள 200 விவசாயப் பெருங்குடி மக்களை அழைத்தோம். "காவிரியில் தண்ணீரோ வருவதில்லை. மழையோ பெய்வதில்லை. இப்படியே போனால் என்ன ஆகும். தஞ்சை தொழில் வளத்தில் மிகவும் பிற்படுத்தப்பட்ட கடைசி மாவட்டம் என்பது தெரியுமா? நாம் ஏதாவது தொழில் துவங்க வேண்டும்" என்ற முன்னுரையுடன் ஒரு இரண்டு நாள் கருத்தரங்கை நடத்தினோம். ஆலோசனை சொல்ல சுமார் பதினைந்து அறிஞர்களை அழைத்திருந்தோம். தஞ்சை மாநகரின் முக்கிய பிரமுகர் அனைவரும் கலந்து கொண்டார்கள். இதன் விளைவாக எடுக்கப்பட்ட யோசனைதான் தஞ்சை மாவட்டத்தில் பனகுடியில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம். எண்ணெய் ஐந்து லட்சம் டன் அளவில்தான் கிடைத்தது. ஆனால் அதிக வாய்ப்பிருந்தது. பெட்ரோல், எரிவாயு மற்றும் பெட்ரோலியப் பொருட்கள் தேவைப்படுவதால் நாம் கச்சா எண்ணெய்யை வெளியிலிருந்து கொண்டு வந்தாவது இங்கு சுத்திகரிக்க வேண்டும் என்று தீர்மானித்து ஜனாதிபதி வெங்கட்ராமனிலிருந்து பலரையும் பார்த்தோம்.

இதற்கு முழு மூச்சாக இறங்கிச் செயல்பட்டவர் எனது நண்பர், சென்னை எண்ணெய் சுத்திகரிப்பு நிலையத்தின் பின்னாள் தலைவர், குடந்தைவாசி – எஸ். ராமலிங்கம் அவர்கள்தான். அவர் சென்னை நிறுவனத்தில் தலைமைப் பதவி ஏற்றபோது இதன் முதலீடு இரண்டாயிரம் கோடியாகவும் பின்னால் நாலாயிரம் கோடியாகவும் உயர்ந்தது.

கவனியுங்கள் இது எம்.பிக்கள் செய்த விஷயமல்ல. அல்லது அமைச்சர்களால் கொண்டு வரப்பட்ட திட்டமல்ல. மக்கள் ஒன்று கூடிச் செய்த திட்டம். தேவையாயிருந்தது என்பது ஒரு தூண்டுகோல்; அவ்வளவுதான். எல்லோரையும் சேர்த்து ஒரு கூட்டம் போடுவதுகூட, எவ்வளவு நல்ல காரியத்தில் முடியலாம் என்பதை அறிந்து கொண்டேன்.

அடுத்ததாக நாங்கள் எடுத்துக் கொண்டது நதி நீர்த் திட்டம் – காவிரி நீருக்கான போராட்டங்கள்.

நதி நீருக்கான திட்டம், எப்படி உருவாயிற்று, மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்த நாங்கள் கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரை 38 நாட்கள் 1030 கிலோமீட்டர் நடந்த பாத யாத்திரை; மேற்குத் தொடர்ச்சி மலையில் காடுகள் அழிக்கப் படுவதைத் தடுக்க நாங்கள் மேற்கொண்ட, நாகர்கோவிலிருந்து மதுரைவரை மலை அடிவாரம் வழியே நடந்த பாதயாத்திரை என்று மொத்தம் நான்கு பாத யாத்திரைகள் சென்றோம்.

(தொடரும்)

## பிளாஸ்டிக் பென்சில்கள்!

ரயிலில் பிளாஸ்டிக் கப்பில் காப்பி வாங்கிச் சாப்பிட்டு விட்டு காலி கப்பை நொறுக்கி எறிகிறோம். இது போன்ற லட்சக்கணக்கான பிளாஸ்டிக் கப்புகள் மண்ணுடன் மக்கிக் கரைவதில்லை, சுற்றுச் சூழலில் – பூமியை மாசுபடுத்தி வருகின்றன.



பிரிட்டனில் பிளாஸ்டிக் கப்புகளை, உபயோகம் முடிந்ததும் சேகரிக்கிறார்கள். மறுபயன் தரும் வகையில் பென்சில்களாக உருமாற்றி விடுகிறார்கள். சாதாரணமாக பென்சில்கள் செய்யப் பயன்படுத்தப்படும் உயர்ரக மரம் இதனால் மிச்சமாகிறது. மரங்களை வெட்டுவது குறைகிறது.

பிளாஸ்டிக் பென்சில்களோ மரப் பென்சில்களைவிட ஐம்பது சதம் மலிவு!

ஆதாரம்: பி.ஸி.என்

● எஸ். சரவணன், மோகனூர்.

? மாநில அரசை பயமுறுத்தும் 356வது சட்டப் பிரிவை நீக்கிவிட்டால் என்ன...?

! நீக்கத் தேவையில்லை என்பதை குடியரசுத் தலைவரின் பொறுப்புள்ள நடவடிக்கையும் மத்திய அரசு அடிபணிய நேர்ந்ததும் உணர்த்து கின்றனவே.

● ஆர். ராமசாமி, திருவண்ணாமலை – 3.

? காவிரிப் பிரச்னை தீர்வுக்கு கங்கை – காவிரியை இணைக்க வேண்டும் என்று கர்நாடக முதல்வர் பாட்டீல் கூறியுள்ளாரே...?

! அது மட்டுமா! கர்நாடக விவசாயிகளின் நலனைத் தமிழகம் கவனித்துக் கொள்ளட்டும், தமிழக விவசாயிகளின் நலனை கர்நாடகம் கவனித்துக் கொள்ளும் என்கிறார். இரண்டுமே இலட்சிய நோக்கில் கரவொலி பெறக்கூடிய பேச்சுக்கள். ஆனால் யதார்த்த சிந்தனைகள் அல்ல.

● ஈ. சிதம்பரம், திருத்தங்கல்.

? எனது மகன் பி.ஏ. படித்து, பல திறமைகளை வளர்த்துக் கொண்டு, உதவி டைரக்டராகச் சேர்ந்து, டைரக்டராக உயர வேண்டும் என்ற வெறியில் சென்னை சென்றிருக்கிறான். தராசின் அறிவுரை என்ன...?

! இலட்சிய வெறியுடன் போயிருக்கிறாரா...? விட்டு விடுங்கள்! அவரை உங்களால் கட்டுப்படுத்த முடியாது. ஒன்று, வெற்றி பெறுவார், அல்லது பாடம் கற்றுத் திரும்பி வருவார். எப்படியானாலும் உங்களுக்கு மகிழ்ச்சிதானே ஏற்படப் போகிறது! ஆனால் ஒன்று... சினிமா எடுக்க சொத்தை விற்கிறேன் என்று ஆரம்பித்தால் மட்டும் எச்சரிக்கை தேவை.

● வாசுதேவன், மும்பை – 86.

? சமீபத்தில் தங்களைக் கலக்கிய விஷயம்...?

! நலகொண்டா அருகே பதினான்கு குழந்தைகளை பலிகொண்ட லெவல் கிராஸிங் விபத்து! 'கேட்' வேண்டும் என்று மக்கள் பலமுறை கேட்டும் நடக்கவில்லை என்பதுதான் கொடுமை!

● ராணி குருநாதன், ஈரோடு – 3.

? சபரிமலை ஐயப்பன் கோவிலுக்குத் தங்கம் இழைக்க மதுபான நிறுவன உரிமையாளர் கோடிக்கணக்கில் நிதி வழங்கியிருக்கிறார்... கோவில் பணிக்கு அதை ஏற்றுக் கொண்டது சரியா...?

! அப்படிப் பார்த்தால், திருப்பதி உண்டியலில் விழும் பணமெல்லாம் நேர்மையாக சம்பாதிக்கப்பட்டதா என்ன! காணிக்கை என்பது, செய்த பாவத்துக்குப் பிராயச்சித்தமாகக் கூட இருக்கக்கூடும். இதனால் தவறை நியாயப்படுத்த முடியாதுதான். ஆனால், கோயிலுக்குக் கிடைக்கிற பணம் நேர்மையான விதத்தில் செலவிடப்படுகிறதா என்பது மிகவும் முக்கியம். அங்கு தில்லுமுல்லுகள் நடக்குமானால் பாவ மன்னிப்பே கிடையாது.

● ந. வந்தியக்குமாரன், சென்னை – 41.

? ஏன் எப்போதும் வாஜ்பாயையும் வாஜ்பாய், அரசையும் குறைகூறிக் கொண்டே இருக்கிறீர்கள்...? மத்திய அரசிடம் நிறைவே இல்லையா?

! அரசு தவறு செய்யும்போது சுட்டிக் காட்டி விமர்சிக்க வேண்டியது பொறுப்புள்ள பத்திரிகைகளின் கடமை. பாராட்டு என்பது அரசு தன் கடமைகளைச் செய்து கொண்டு போவதற்காகக் கிடைக்காது. கடமைகளைக் கடந்த பெரிய சாதனைகள் நிகழும்போதுதான் அரசு பாராட்டுப் பெறும்.



• புதிய தீர்வு!



• பொறுப்புள்ள நடவடிக்கை



• சீன முயற்சி!

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

? 'சாதா-ரணம்' அல்ல கதைக்குப் பரிசு வழங்கப்பட்டிருப்பதை செம்மலர் இதழ் தாக்கி எழுதியிருக்கிறதே...?

! ஒரு சட்டத்தின் இன்னொரு பக்கத்தை அந்தக் கதை சுட்டிக்காட்டுவதால் ஜாதி ஒழிப்பை ஒட்டுமொத்தமாக அந்தக் கதை எதிர்ப்பதாக ஆகி விடாது. அது ஒருபுறமிருக்க, ஒரு கதை விமர்சகர் பார்வையில் சரியில்லாததாக இருக்கலாம். அதை வெளியிட அவருக்கு முழு உரிமை உண்டு. ஆனால், தமது வாதத்துக்கு நியாயம் கற்பிக்க, என்றைக்கோ கால மானவர்களை இன்று துணைக்கு அழைத்துக் கொள்ளக் கூடாது. மாறுபட்ட இன்றைய சூழலில் – இன்றைய சட்டங்களின் அடிப்படையில் – கல்கி எப்படி எழுதுவார் என்பது

நாம் ஊகிக்க முடியாத, ஊகிக்கக் கூடாத ஒன்று!

● **டி. வரதன், மன்னார்குடி.**

? **பத்திரிகைகளில் வரும் சினிமா விமர்சனங்களில் தங்களுக்குச் சாதகமான பகுதியை மட்டும் பிரசுரித்து, அதன் கீழே அப்பத்திரிகையின் பெயரைப் போட்டு விளம்பரம் செய்கிறார்களே... இது ஏமாற்று வேலைதானே?**

! ஆமாம்! ஆமாம்!

● **க. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.**

? **எண்பது வயது நிறைவுறும் எம்.ஏ. சிதம்பரம் பற்றி...?**

! தமிழக தொழில் வ்ளர்ச்சியில் அவருக்கு முக்கிய பங்கு உண்டு. SPIC, Tamil Nadu Petro அவர் முயற்சியில் பிறந்து வளர்ந்தவை. கிரிக்கெட் ஆதரவாளர்; தமிழிசை போஷகர்; கலை, இலக்கிய ரசிகர்...



• விசாரணை மர்மம்!



• கோமாளி ஹோமத்!



• எண்பதில் இளைஞர்!

● **ஆர்.பி. ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்.**

? **தீபாவளி என்றவுடன் நினைவுக்கு வரும் விஷயம்...?**

! கல்கி தீபாவளி மலரைத் தவிர வேறென்ன வாக இருக்க முடியும்!

● **பாம்பன். செ. சல்மான்ஸ்.**

? **சீனாவில் சுற்றுப்பயணம் செய்ய தமது கட்சியிலிருந்து ஒரு குழுவை அனுப்புகிறாராமே சுவாமி?**

! கடவுளே! அப்படித் தேர்ந்தெடுத்துக் குழு அமைக்கிற அளவுக்குக் கட்சியிலே 'கூட்டம்' இருக்கிறதா என்ன...? கஷ்டப்பட்டு நம்பப் பார்க்கிறேன்.

● **கே.வி. ராமன், சென்னை - 73.**

? **லல்லு பிரசாத் யாதவ், 'ஸ்வாஹா ஹோமத்' நடத்தினாரே... அவருடைய கட்சி மதச்சார்பற்றது என்று கூற முடியுமா?**

! அதில் மதமும் இல்லை; மதச்சார்பின்மையும் இல்லை... கோமாளித்தனம்தான் இருக்கிறது.

● **அ. ராஜா ரஹ்மான், கம்பம்.**

? **அன்பு, கருணை, வாஞ்சை - மூன்றுக்கும் உள்ள வித்தியாசம் என்ன...?**

! அன்பென்பது சமநிலையில் வைத்துப் பார்க்கும்; கருணையோ, கொஞ்சம் உயர் நிலையிலிருந்துதான் நோக்கும்; வாஞ்சை, சலுகைகளால் மூழ்கடிக்கும்!

● **ராஜி, கமுதி.**

? **பேஸ்பருவாவைத் திடீரென்று நீக்கியது ஏன்...? திடீரென்று மீண்டும் பதவியில் அமர்த்தியது ஏன்...?**

! மீண்டும் அமர்த்தியது உச்சநீதிமன்ற ஆணைக்குக் கட்டுப்பட்டு; நீக்கியது...? அந்த மர்மத்தைக் கண்டுபிடிக்கத்தான் பிரதமர் விசாரணைக்கு உத்தரவிட்டார். விசாரணை நடக்குமா என்பதே மர்மமாய் இருக்கிறது.

● **கே. ஏ. பால முருகன், திருநெல்வேலி - 8.**

? **நம் கண்முன்னே ஒரு தவறு நடக்கிறது - அதைத் தட்டிக் கேட்பவன் மனிதனா? இல்லாவிட்டால், தவறு செய்தவர்களையெல்லாம் ஆண்டவன் பார்த்துக்குவான் என்று பெருந்தன்மையுடன் நடந்து கொள்பவன் மனிதனா...?**

! தவறைத் தட்டிக் கேட்பது தவறல்ல... கேட்பவன் சிறந்த மனிதன்; ஆனால், தவறுக்கான தண்டனையை வழங்க சட்டத்தைக் கையில் எடுத்துக் கொள்பவன் தவறு செய்கிறான். தெய்வம் நின்று கொல்லும் என்ற நம்பிக்கை அப்போது வேண்டும்.

## லல்லுவின் கட்சி மதச்சார்பற்றதா?

❑ **ரூ. 50 பரிசு பெறுபவர் :**
**ராணி குருநாதன்,**
**134, ஆர்.கே.வி. நகர்,**
**கருங்கல்பாளையம், ஈரோடு - 638 003.**

# நடக்குமென்பார்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இள வயசுக்காரங்களுக்கு டயம் நல்லா ஒர்க் அவுட் ஆவுங்க. வேலை தேடிட்டிருக்கறவங்க, கல்யாணத்துக்குக் காத்துட்டிருக்கறவங்க பரீட்சை எதனா எழுதிட்டு ரிசல்ட் எதிர்பார்க்கறவங்களுக்கு வெற்றி கதவைத் தட்டப் போவுது. குறிப்பா பெண்களுக்கு இந்த வாரம் பல நல்ல விஷயங்கள் நடக்கற சான்ஸ் இருக்கு. சிலருக்கு எதிர்பாராத பண வரவு இருக்கு. வயசானவங்களுக்கு மருத்துவச் செலவுகள் கொஞ்சம் இருக்கும்னாலும் பெரிய பாதிப்பு ஏதும் வராது. விளையாட்டுத் துறையினருக்கு இது ரொம்ப ஆதாயமான வாரம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

பொதுவாவே உங்களுக்குத் தன்னம்பிக்கை ஜாஸ்திங்க. கடுமையா உழைப்பீங்க. எதிலும் எங்கேயும் நீங்கதான் வெற்றியாளர்னா பார்த்துக்கங்க. ஆனா, பதற்றமும், முன் கோபமும் உங்க வளர்ச்சிக்குக் குறுக்கே நிக்குது. அவசரப்பட்டு எதையானும் செய்து சொதப்பிடதீங்க. நிதானமும் பொறுமையும் ரொம்ப முக்கியம். இந்த வாரம் முதலீடுகளை தவிர்த்துடுங்க. போட்டி, பந்தயம் எதுலயும் கலந்துக்காதீங்க. பெற்றோர், மனைவி உடல் நலத்துல அக்கறை காட்டுங்க. உங்க எதிரிகள் அங்கங்க காத்திருந்து உங்களைக் கவிழ்க்கப் பார்க்கறாங்க. வேலைல ரொம்ப எச்சரிக்கையா இருங்க. பிள்ளையார் கோவிலுக்கு தினமும் போயிட்டு வாங்க.






**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

தேவைக்கேற்ப பணம், புரிஞ்சிக்கற சுபாவம் உள்ள வாழ்க்கைத் துணை, பிக்கல் இல்லாத உத்தியோகம். உங்களுக்கென்னங்க! ராஜாதான். இப்ப நீங்க தொடங்கற எந்தப் புதுமுயற்சியும் வெற்றிதான். கோர்ட் விவகாரங்கள் ஏதாவது இருந்தா சாதகமா தீர்ப்பை எதிர்பார்க்கலாம். சிலருக்கு லாபகரமான முதலீடுகளுக்கான வாய்ப்பு வரும். வெளியூர்ப் பயணங்களும் ஆதாயமே தரும். கலைத் துறையினருக்கு பரிசும் விருதும் வந்து சேரும் நேரம் இது. பிக்பாக்கெட் அபாயம் மட்டும் உண்டு. பயணத்துல எச்சரிக்கையா இருங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எதிர்பாராத திருப்பங்களை சந்திக்க வேண்டி வரும். குறிப்பா உத்தியோக ரீதில சிலருக்கு விரும்பாத டிரான்ஸ்பர், நீண்ட தூர அலைக்கழிப்புன்னு கொஞ்சம் படுத்தலாம். பண நெருக்கடி இருக்கற நேரத்துல கண்ட செலவுகள் செய்யாதீங்க. விருந்து, சினிமாவெல்லாம் தவிர்க்கப் பாருங்க. நிறைய மொய் எழுதி பணம் கரையும். சிலருக்கு உடல் நலக் கோளாறுகள் கூட வரலாம். அரசியல்வாதிகள் உஷார்! ரெய்டு அபாயம் இருக்குது. கலைத் துறையினருக்கும் பிரமாதமா வளர்ச்சி இருக்காது. டாக்ஸெல்லாம் ஒழுங்கா கட்டிடுங்க. இல்லாட்டி மாட்டிக்குவீங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வீட்டுல விசேஷங்க! அதாவது நீங்க அப்பாவாகவோ, தாத்தாவாகவோ ஆகப் போறீங்க. அது மட்டுமா? 'இந்தா சாப்டு'ன்னு நீங்க எதிர்பாராத இடங்கள்லேருந்தெல்லாம் பண வரவு இருக்கும். வீடு வாங்கறீங்களா? வாங்குங்க. சிலருக்கு அதிர்ஷ்டப் பரிசு மூலமா வீடோ, காரோ கூட வரலாம். (எத்தனை தீபாவளி மலர், புக் பண்ணியிருக்கீங்க?) கணவன் மனைவி உறவு திருப்திகரமா இருக்கும். வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. இயந்திரத் தொழிலாளர்கள் மட்டும் கொஞ்சம் உஷாரா வேலை பாருங்க. சிறு விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்கு.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

அக்டோபர் 7 முதல் 13 வரை

பிக்பாக்கெட் தொந்தரவு இருக்கும். அதே சமயம் ரோடுல அஞ்சு பத்து கீழ கிடைக்கும்! உடம்பு படுத்தும்; உடனே சரியாகவும் ஆயிடும். அலுப்புத் தரும் பயணங்கள் இருக்கும். ஆனா பலன் கண்டிப்பா உண்டு. கஷ்டப்பட்டு ஏதாவது சாதனை செய்வீங்க. உரிய பாராட்டு தாமதமாத்தான் கிடைக்கும். அண்ணன் தம்பிங்க நடுவுல சண்டை ஏதாவது வரலாம். உடனே சரியாகி, பாசம் பிச்சிக்கும். இது லேருந்து என்ன தெரியுது? இது உங்களுக்கு நல்லதும் கெட்டதும் கலந்த வாரம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

சின்ன விஷயங்களைப் பெரிசு படுத்தாதீங்க. இந்த வாரம் குட்டி குட்டியா நிறைய பிரச்னை வரும் - ஆபீஸ்ல. அமைதியா தீர்வு காணப்பாருங்க. டென்ஷனாகி வார்த்தையை விட்றாதீங்க. வீட்டுல சுமுகமான நிலை மெயின்டெயின் ஆகும். ஆனா அப்பப்ப புடவை, பூன்னு வாங்கிக் கொடுத்து சம்சாரத்தை குஷிப்படுத்துங்க. வெளிநாட்டுத் தொடர்பு இருக்கா? ஆதாயமா ஒரு நல்ல சேதி வரும். ஷேர் இப்ப வேணாம். பெண்களுக்கு இது சாதாரண வாரம். பொருள்கள் சில தொலைஞ்சு போகும் அபாயம் இருக்கு.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

விவசாயிகள், தொழிலாளிகளுக்கு இது சாதகமான நேரம். லாபம் நிறைய கிடைக்கும். இது நல்ல டைம்தான். ஆக்க பூர்வமான வேலைகளை இப்ப தொடங்கினா, பலன் உறுதி. பெண்களுக்கு இது புதுப் புடவை வாரம்! பர்சேஸ் பட்ஜெட் பார்த்துப் போடுங்க. தீ விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்கு. கவனமா இருங்க. அலுவலகத்துல பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பு உண்டு. சிலருக்குப் பரிசுகளும் கிடைக்கலாம்! மொத்தத்துல இந்த வாரம் உங்களுக்குச் சாதகமாவே இருக்கும்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

குழப்பக் கடல்னு உங்களைத் தாங்க சொல்லணும். ஏன் ஒண்ணுமில்லாத விஷயங்கள்ல மனசைப் போட்டு அலட்டிக்கறீங்க? உங்க நண்பர்கள் உதவி செய்யக் காத்திருக்காங்க. பணப் பிரச்னை என்னவோ இல்லை! அப்புறம் என்னங்க கவலை. வியாபாரிகள், முதலாளிகளுக்கு இது லாபகரமான வாரம். துணிஞ்சி இறங்கினீங்கன்னா எதிலும் வெற்றி நிச்சயம். மாணவர்கள் படிப்புல ரொம்ப கவனமா இருக்கணும். லவ் லெட்டர் குடுக்கற வேலையெல்லாம் இப்ப வேணாம். டின் கட்டிடுவாங்க. பெண்களுக்கு இது நல்ல வாரம். வீட்டு உபயோகப் பொருட்கள் வாங்குவீங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

இதுவரைக்கும் குடும்பத்துல இருந்து வந்த குழப்பங்கள் போயிடும். உறவுகள் வலுவாகும். என்ன ஒண்ணு, நீங்க உங்க முன்கோபத்தைக் கொஞ்சம் குறைச்சுக்கணும். வயசுப் பசங்களுக்குக் கல்யாண யோகம் கூடுது. சட்டுபுட்டுன்னு காரியத்தை முடிங்க. சினிமாத் துறையினருக்கு இது சாதகமான வாரம். பெண்களுக்கும் நினைச்சது நடக்கும். காதல் விஷயம்னா டபுள் ஓகே! உடனே ஒர்க் அவுட் ஆகும். பெற்றோர் உடல்நலன்ல ரொம்ப அக்கறை அவசியம். சிறு மருத்துவச் செலவும் இருக்கும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

செயல்கள்ல ரொம்ப வேகம் வேணாங்க. சட்டுனு ஒரு தடை வந்தா பிரச்னை ஆயிடும். அமைதியா இருங்க. உங்க மகன்கள் மூலமா ஏதோ நன்மை நடக்கப் போவுது. கம்ப்யூட்டர், அறிவியல் துறையைச் சேர்ந்தவங்களுக்கு புகழும் பணமும் கூடும்! வெளிநாடு சான்ஸ் பலருக்கு உண்டு. அரசு ஊழியர்களுக்கும் நீண்ட நாள் பாக்கிகள் வந்து சேரும். நண்பர்கள் உதவுவாங்க. வீடு, வாகனம் வாங்கற யோகம் சிலருக்கு இருக்கும். தெய்வ பக்தி மிக்க உங்களுக்கு இப்ப லேசான உடல் நலக் குறைவு ஏற்படறத மட்டும் தவிர்க்க முடியாது.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கூட இருந்தே குழிபறிக்கிற நண்பர்களை அடையாளம் காணப் பாருங்க. உங்களோட எல்லா முயற்சிகளும் தடை படறதுக்குக் காரணம் அவங்கதான். புது வீடுகள், புதிய தொழில், வியாபாரம் எதுவும் இப்ப வேணாம். லாட்டரி, ரேஸ் பக்கம் போனீங்கன்னா கணிசமா இழக்க வேண்டி வரும். வீட்டுல சிறு மனஸ்தாபங்கள் வரும். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க. கைப் பொருள் இழப்புக்கு வாய்ப்பு அதிகம். பிவேர் ஆஃப் பிக் பாக்கெட்ஸ்! ●

நடக்கும்!

# தமாஷ்

"அமுதா! மழைக் காலத்துல பீச்சுக்கு வர முடியாதே. அப்ப நாம எங்க சந்திக்கிறது?"

"அதுவரைக்கும் நம்ம காதல் நீடிக்கும்னு நினைக்கறீங்களா?"

— எஸ்.எஸ். பூங்கதிர்





"தலைவர் ஏன் குடுகுடுப்பைக் காரன் கிட்ட சண்டைக்குப் போறார்?"

"நாட்டுக்கு நல்ல காலம் பிறக்குதுன்னு சொன்னானாம். காலங்காத்தால என் பதவி போயிடும்னு ஏன் அபசகுனமா பேசறேன்னு கத்தறார்!"

—சென்னிமலை செந்தில்குமார்



"தலைவரே! வாரிசு அரசியலுக்கு ஒரு முடிவு கட்டணும்னு கட்சியிலே பேச ஆரம்பிச்சுட்டாங்களே, என்ன பண்ணலாம்?"

"பரிசீலனை செய்ய குழு ஒண்ணு நியமிச்சுடுங்க. அதில என் மருமகனையும் உங்க பெரிய மகனையும் உறுப்பினராப் போடுங்க!"

— எஸ்.வி. ரமணி

# டைம்!

"ம்... சரி... அப்படியா... இருக்கலாம்... முடியாது... ம்ஹும்... இல்லை... இப்படி ரொம்ப நேரமா சொல்லிட்டு இருக்காரே யாரு?"

"மணிரத்னத்தோட அடுத்தப் பட ஹீரோவாம். டயலாக் மனப்பாடம் பண்றார்."

— சென்னிமலை செந்தில்குமார்

"தமிழ் ஆசிரியர் ஏன் மூட் அவுட் ஆகி போய்ட்டாரு?"

"தைய தையா தையா தைய்யா—ன்னா என்ன அர்த்தம்னு கேட்டேன்!"

— சென்னிமலை செந்தில்குமார்





"மாப்ளே! நீங்க பி.ஜே.பி. ஆதரவாளரா இருக்கலாம். அதுக்காக தலை தீபாவளியை 'அணுகுண்டு' வெடிச்சுதான் கொண்டாட ணும்னு சொல்றது கொஞ்சம் கூட சரி யில்லை!

— மன்னை பி.ஆர். பார்த்தசாரதி



"மீனு, படம் சகிக்கலை. டீ.வி.யை நிறுத்திட்டு ஒரு 'கப்' காபி கொண்டா!"

"உங்க ஞாபகமறதிக்கு ஓர் அளவே இல் லையா? இது சினிமா தியேட்டருங்க!"

— அய்யாறு ச. புகழேந்தி



**இன்னும் சில ஆண்டுகளில் இன்டர்நெட் வலையில் சிக்காத மனிதர்களே இருக்க மாட்டார்கள். காரணம், உங்கள் தெருவிலும் அந்த வலை வீசப்படும் நாள் வெகு தூரத்தில் இல்லை....**

# மனிதர்களைச் சிக்க வைக்கும் இன்டர்நெட்!

இதமான ஒளியமைப்பு, மழமழ வென்று மேஜை நாற்காலிகள், காபி மெஷின், சுவரில் ரசனையுடன் நேர்த்தி யான அலங்காரம். அமெரிக்க பாணியில் உயரமான நீள கவுன்டர் அதனையொட்டி உட்கார சுழலும் ஸ்டூல்கள். எங்கு பார்த் தாலும் நியூ ஏஜ் இளமையின் நேர்த்தி...

பிட்ஸா விற்கும் நவீன ஹோட்டல் அல்ல இது... இன்டர் நெட் கஃபே! நெட் கஃபே என்றே பெயர்!

தென்னகத்தின் முதல் இன்டர்நெட் மையம்! சென்னை மியூஸிக் அகாடமி அருகே ஒரு இடுக்கில் ஒளிந்து கொண் டிருந்தாலும் சக்கைபோடு போடுகிறது சைபர் குளோப் நிறுவனத் தின் அங்கமான நெட்கஃபே. இன்டர்நெட்டைத் துழாவு கையில் இங்கே வயிற்றுக்கும் ஈயப்படுகிறது!

இந்தியாவில் – சென்னை உட்பட – இப்போது சுமார் முந்நூறு இன்டர்நெட் மையங் கள் இயங்குகின்றன! இவற்றில் உறுப்பினராக இருக்க வேண்டும் என்ற அவசியம் கூட இல்லை.

டெலிபோன் வசதியில்லாத வர்கள் போன் பூத்தில் போய் போன் செய்வது போல் யார் வேண்டுமானாலும் இந்த இன்டர்நெட் டகங்களில் புகுந்து கட்டணம் செலுத்தி, கம்ப்யூட்டரைப் பயன்படுத்தலாம். தகவல் வலையில் சிக்கி, அதிசயித்து, திக்குமுக்காடி, மயங்கி, வெளியே வர மனமின்றி சப்புக் கொட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க லாம்.

சென்னையில் இதுபோன்ற இன்டர் நெட் 'சர்ஃபிங்' அல்லது 'பிரவுஸிங்' மையங் கள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன. 'இரவு – பகல் எங்கள் மையம்' திறந்திருக் கும்; 'ஒரு மணி நேரத்துக்கு அறுபது ரூபாய்; 'வசதியான சூழலில் இன்டர்நெட் வலைப் பின்னல்' போன்ற வாசகப் பலகைகள் சாந்தோம், அடையாறு, அசோக நகர், ஆழ்வார்பேட்டை என்று சற்றே செழிப் பான பகுதிகளில் புதிது புதிதாக முளைத்தவண்ணம் இருக்கின்றன.




• இனி தெருவுக்குத் தெரு இன்டர்நெட் கஃபேக்கள்தான்!

இதுபோன்ற மையங்கள் வளரும் வேகத்தையும், இவற் றிற்கு அரசு அளிக்க விருக்கும் ஆதரவையும் பார்த்தால், இப் போது பி.சி.ஓ. இருப்பது போல் இவையும் தெருவுக்கு ஒன்று என்று விரைவிலேயே பெருகினால் ஆச்சர்யப்படுவதற்கு இல்லை.

கொஞ்ச காலத்துக்கு முன்பு வரை கூட இதுபோன்ற வசதி சில ஐந்து நட்சத்திர ஓட்டல்களில் மட்டுமே இருந்தது. இப்



* இன்டர்நெட்டில் வலை வீசும் வாடிக்கையாளர்கள்...

போதுதான் அசுர வேகம்.

"நவம்பர் 1996-ல்தான் இதைத் தொடங்கினோம். இன்டர்நெட் பற்றிய நேரடி அனுபவம் இல்லாதவர்களுக்காக சில மணி நேர பயிற்சியும் தருகிறோம். உறுப்பினர்கள் என்றால் சலுகை உண்டு. என்றாலும் புதியவர்கள் கூட எப்போது வேண்டுமானாலும் வந்து இந்த வசதியைப் பயன்படுத்திக் கொள்ளலாம்" என்கிறார்கள் நெட்கபேயின் நிர்வாக இயக்குனர் முகமது யூனுஸும். மற்றும் அதை பொறுப்பேற்று நடத்தும் மதுவும். தங்களுடையது 'லீஸ் லைன்' என்பதில் இவர்களுக்குப் பெருமை.

அது என்ன லீஸ் லைன்? அதில் என்ன பெருமை? பொதுவாக "டயல் அப்" என்ற முறையில்தான் இன்டர்நெட் வசதியைப் பெற முடியும். அதாவது அரசின் விஎஸ்என்எல் அமைப்பைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு, அவர்கள் மூலம் இன்டர்நெட் 'சாவி'யைப் பெறுவது. இந்த விதத்தில் குறிப்பிட்ட எண் கிடைக்காமல் என்கேஜ்ட் ஆகவே இருந்து எரிச்சல் ஏற்படுத்தக்கூடும். லீஸ் லைனில் அந்தத் தொல்லை இல்லை. சர்வதேச இன்டர்நெட் மையத்துடன் தொடர்பு கொண்டிருப்பதால், நேரடித் தொடர்பு சாத்தியமாகிறது.

இதுபோன்ற மையங்களில், ஸ்லாட்டுக்கு இவ்வளவு என்று வசூலிக்கிறார்கள். ஒவ்வொரு அரைமணி நேரமும் ஒரு ஸ்லாட். ஒரு ஸ்லாட்டுக்கு உண்டான கட்டணம் ஐம்பது ரூபாய். 'பீக்அவர்' என்றால் (காலை 11 முதல் மதியம் 1 வரை; மாலை 4 முதல் 8 வரை) ஒரு ஸ்லாட்டுக்கு மேலும் பத்து ரூபாய்.

நெட்கபேயில் இன்டர்நெட் வசதியை அதிகம் பயன்படுத்திக் கொள்பவர்கள் வியாபாரிகள், வழக்கறிஞர்கள் மற்றும் சார்ட்டர்ட் அகௌண்டன்ட்கள்தானாம். உறுப்பினர்கள் தங்களுக்கு 'ஈ மெயில்' வந்திருப்பதை உறுதிசெய்து கொள்வதற்கும் இலவச வசதி.

அங்கு வந்திருந்த சிலரிடம் வருகைக்கும், வலைவீச்சுக்குமான காரணத்தைக் கேட்டோம். "எங்கள் வியாபாரத் துறையில் உலக அளவில் என்னென்ன மாற்றங்கள் என்பதைச் சூடாக தெரிஞ்சுக்கத்தான்"; "வாழ்க்கையிலே சீரியஸாய் இருந்தே போர் அடிக்குது. அதனால்தான் மனமகிழ்வுக்காக இன்டர்நெட் மூலம் வேடிக்கை விளையாட்டுகளில் ஈடுபடுகிறேன்"; "அப்பா அமெரிக்காவிலிருந்து ஈமெயில் அனுப்பியிருக்கிறாரான்னு பார்க்கத்தான்"; "உலகச் செய்திகளை அப்பப்போ தெரிஞ்சுக்கறதிலே ஒரு த்ரில்"; "அமெரிக்கப் பல்கலைக் கழகங்களிலே அட்மிஷன் நிலவரம் எப்படியிருக்கு என்பதை அறியத்தான்!" - இப்படிப் பலரும் பல காரணங்களைச் சொன்னார்கள்.

வொர்ல்ட்டெல் தலைவர் சாம்பிட் ரோடாவுடன் தமிழக அரசு சமீபத்தில்



''எனக்குள் இன்னொரு சாமானியப் பெண் இருக்கிறாள்னு பேட்டி கொடுத்தது தப்பாப் போச்சு.''

''என்னாச்சு?''

''நான் முழுகாமல் இருக்கிறதாவும், ஸ்கேன்ல அது பெண் குழந்தைன்னு தெரிஞ்சிட்டதாகவும் எழுதிட்டாங்க!''

– சீர்காழி வி. ரேவதி



''எட்டு வருஷமா 'எருமை மாடு'ன்னே கூப்பிட்டுக்கிட்டிருந்த எங்கப்பா முதல் தடவையா நேத்து என்னை 'டேய் முருகேசு'ன்னு பிரியமா கூப்பிட்டார்டா!''

''அட! வேலை கிடைச்சிடுச்சா உனக்கு!'

– உ. ராஜாஜி



''எங்க வீட்டு வேலைக்காரி ரொம்பவும் விவரமானவ!''

''எதைவெச்சு அப்படிச் சொல்றீங்க?''

''வந்தவுடனே அக்கம் பக்கத்துச் செய்திகளையெல்லாம் தலைப்புச் செய்திகளாகச் சொல்லிவிட்டு, வேலையை முடித்துவிட்டுப் போகும்போதுதான் விவரமாச் சொல்லுவா!''

– குமார்

செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தின் விளைவாக, இதுபோன்ற மையங்களை அரசே கூட வருங்காலத்தில் தொடங்கலாம். அப்போது போட்டி பலமாக இருக்குமோ?

''மாநில அரசுகள் சுற்றுலாப் பயணிகளுக்காக சில விடுதிகளைக் கட்டுவதுண்டு. அதே சமயம் நட்சத்திர ஹோட்டல்களும் சுற்றுலா பயணிகளை வசீகரிக்கின்றன. இரண்டும் ஒன்றுக்கொன்று போட்டியும் அல்ல; எதிரியும் அல்ல'' என்கிறார்கள் இவர்கள். காரணம், எதிர்காலத்தில் இதை உபயோகிக்கும் மக்களின் எண்ணிக்கையும் எக்கச்சக்கமாக இருக்கும் என்பதுதான்.

க்ளிண்டன் - லூவின்ஸ்கி வி(வ)காரங்களை இன்டர்நெட்டில் வெளியிட்டபோது அமெரிக்கா முழுதுமே - (ஏன் உலகம் முழுவதுமே) அதைக் காண முயற்சி செய்ய இணைப்பு கிடைப்பதே பிரும்ம பிரயத்தனமாக இருந்திருக்கிறது.

எந்தச் செய்தியையும் இன்டர்நெட்டில் வெளியிடலாம். தனிநபர்களுக்கு இணைப்பு தரப்படுவதால் யார் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் இன்டர்நெட்டில் வெளியிடலாம் என்கிற நிலைமை உருவாகியிருக்கிறது.

மேலைநாடுகளில் குழந்தைகளைத் தனியே இன்டர்நெட்டில் அமர அனுமதிப்பது குறித்து கவலைப்படும்படியாக, நிலைமை ஆபாச எல்லைகளைத் தொட்டிருக்கிறது.

உலகளாவிய வலைப் பின்னல் என்பதாலும் விண்வெளி சாடிலைட் மூலம் தொடர்புகள் ஏற்படுத்தப்படுவதாலும், இன்டர்நெட்டுக்கு எந்தவொரு கட்டுப்படுத்தும் அமைப்பும் கிடையாது. சினிமாவுக்கு சென்ஸார், டெலிவிஷன், ரேடியோவுக்கு விதிகள் போல் இன்டர்நெட்டுக்கு உலகளாவிய நன்னெறி விதிகள் வகுக்கப்படுமா...?

வகுக்கப்பட்டாலும் கடைப்பிடிக்கப்படுமா...? என்பதெல்லாம் கேள்விக்குறிதான்!

தகவல் புரட்சியின் மறுபக்கமாக இன்டர்நெட்டினால் பலவீனமான மனங்கள் வளமிழந்து வக்கிரமாகப் போகிற அபாயம் அச்சுறுத்தத்தான் செய்கிறது. தகவல் வலையை நாடிப் போகிறவர்கள் தவறான வலையில் சிக்காமல் மீண்டு வந்தாக வேண்டும்.

— ஜி.எஸ்.எஸ்.

அட்டை வண்ணப்படம் மற்றும் படங்கள் : ஸ்ரீஹரி

# இவர் வாங்கல்–விற்கல் கோடீஸ்வரர்.
# வாங்கி மாற்றுவது அரசுகளை.



இது, நாம் படைத்த அரசு என்று நாம நம்பிக் கொண்டிருக்கிறோம். ஆனால், உண்மையில் இதை உருவாக்கி, ஆட்டிப் படைப்பது இந்த தொழிலதிபரும் இவர் கூட்டாளிகளும். இப்போது நாம் செய்யக் கூடியதெல்லாம், பார்த்துக்கொண்டிருப்பதுதான்.

# அக்னி

**260 எபிஸோடுகளை**
**கொண்ட பிரம்மாண்டமான புதிய தொடர்.**




**வாரந்தோறும் திங்கள் முதல் வெள்ளி வரை.**
**இரவு 7.00 மணி முதல் 7.30 வரை.**



• நோயாளி ஒருவரின் நாடி பிடித்துப் பார்க்கிறார் டாக்டர் நரம்.

# நச் அசத்தும் நாடி வைத்தியம்!

**நா**டி ஜோசியம் கேள்விப்பட்டிருக்கிறோம். நாடி வைத்தியம்?

பம்பாய்ப் புறநகர்ப் பகுதிகள் விலே பார்லேயிலும், காண்டிவிலியிலும் ஆயுர்சக்தி கிளினிக்குகள் நடத்தி வரும் டாக்டர் நரம், "இது 6300 வருடங்களாகக் கையாளப்பட்டு வரும் வைத்திய முறை!" என்கிறார். "நாடி என்பது சாதாரண விஷயமல்ல. டீவி மாதிரி, உள்ளே நடக்கிறதைப் படம் மாதிரி காட்டி விடும். 'ட்யூன் பண்ண'த் தெரிந்திருந்தால் போதும், உடலின் ரகசியங்கள் முழுதும் நாடி பிடித்துப் பார்ப்பவருக்குத் தெரிந்துவிடும்!"

தமது பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஒரு தாயார் டாக்டர் பங்கஜ் நரம் கிளினிக்குக்கு வந்தார். "இவ, ஒரு வாரமா வயத்து வலியால துடிக்கிறா டாக்டர்!" என்றார். நரம் நாடி பிடித்துப் பார்த்துச் சொன்னார், "சமீபத்தில் அபார்ஷன் செய்து கொண்டிருக்கிறாள் உங்கள் பெண். அதுதான் வலி!" என்றார்.

அம்மாவுக்கு ஏகக் கோபம். வந்த ஆத்திரத்தில் டாக்டரை வசை மாறி பொழிந்து திட்டித் தீர்த்தாள். ஏனென்றால் பெண்ணுக்குக் கல்யாணமே ஆகவில்லை! மூன்று மணி நேரம் கழித்து அந்தப் பெண் அம்மா இல்லாமல், தனியே வந்து டாக்டரிடம் அழுதாள். "நீங்கள் சொன்னது உண்மைதான், டாக்டர். எப்படியாவது என் வலியைக் குணமாக்குங்கள்!"

"இது மாதிரி சமாசாரங்கள் ரொம்ப சர்வ சாதாரணம். நிறைய பக்தர்கள் இருக்கிற ஒரு சந்நியாசினிப் பெண்மணியிடமும் இதே மாதிரி ஒரு பதிலைச் சொன்னேன். ஒன்றல்ல, மூன்று அபார்ஷன்கள்!

"முதலில் ஆக்ரோஷமாக மறுத்த சந்நியாசினி, பிறகு அழுது கொண்டே உண்மையை வெளியிட்டாள். உடல் உபாதை தவிர, குற்ற உணர்ச்சியே முதலில் நோய்க்கு இடம் தரும்!" என்கிறார் டாக்டர் நரம்.

"வாதம், பித்தம், கபம் இவற்றில் 350 வகையான காம்பினேஷன்கள் இருக்கின்றன. இந்த நாடி பிடித்துப் பார்க்கும் கலையில் வல்லவரான டாக்டருக்கு, எந்தப் பாகத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது என்று கண நேரத்தில் தெரிந்து விடுகிறது."

ஹார்ட் கோளாறுகள், ஆஸ்த்துமா, சிறுநீரகக் கோளாறுகள், ஆர்த்ரைடிஸ், சரும நோய்கள், வாதம், புற்றுநோய், ஏன் மன நோய்க்கும் கூட இவர் ஏராளமான நபர்களுக்கு ட்ரீட்மெண்ட் கொடுத்திருக்கிறாராம். ("சுமார் 2,25,000 பேர் இருக்கும்" என்கிறார் ஒரு குத்து மதிப்பாக!)

குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்கு அந்த பாக்கியம் கிடைக்க வைத்திய உதவி அளித்திருக்கிறாராம்.

இவரும் இவர் மனைவி டாக்டர் ஸ்மிதா நரமும், நாற்பது மேற்கத்திய - இந்திய டாக்டர்களுக்கு இந்த வகை ஆயுர்வேத வைத்திய முறையில் பயிற்சி அளித்து, இதாலி, ஜெர்மனி, ஹாலந்து, அமெரிக்கா, கனடா என்று பல வெளிநாடுகளில் ஆயுர்சக்தி ஆயுர்வேத சென்டர்களைத் திறந்து வைத்திருக்கிறார்கள்.

விலே பார்லே கிளினிக்கிலும், காண்டிவிலி கிளினிக்கிலும் க்யூ வளைந்து வளைந்து நிற்கிறது. பொறுமையோடு காத்திருந்தால் டாக்டர் பங்கஜ் நரம் உங்கள் நாடியைப் பிடித்துப் பார்த்து, சிகிச்சை தருவார்!

"நான் 135 வருடங்கள் உயிரோடு இருப்பேன். கவலைப்படாமல் மெதுவாக வாருங்கள்!" என்கிறார் ரொம்பவும் கேஷுவலாக.

— சித்தார்த்

# வையாளி

கிருஷ்ணா

கீழச் சித்திரை வீதியெங்கும் ஜேஜே வென்றிருந்தது. உற்சாகம் கொப்பளிக்கும் மக்கள்.

ஸ்ரீரங்கம் ரங்கநாதரின் 'வையாளி' உற்சவத்தைக் காணவே இப் பெருங்கூட்டம். நாளை சித்திரைத் தேர்.

இருபது வருடங்கள்! ஆம், இருபது வருடத்திற்குப் பிறகு நான் மீண்டும் இந்த வையாளியில் கலந்து நிற்கிறேன்.

அனிச்சையாய் என் கண்கள் எதிர் வீட்டை நோக்கின. போன வாரம்தான் ஸ்ரீரங்கத்துக்கு வேலை மாற்றலாகி இந்த வீட்டில் வந்து செட்டிலானோம். அதே வீடு! நான் என் பெற்றோருடன் வசித்த அதே வீடு. அதே எதிர் வீடு!



''என்ன அடிக்கடி எதிர் வீட்டையே பார்க்குது உங்க கண்ணு?''

என் மனைவி காதருகில் வந்து கிசுகிசுத்தாள்.

"மலரும் நினைவுகள்" என்றேன் புன்சிரிப்புடன்.

"ஐயோ, மீண்டும் உங்க சின்ன வயசுப் புராணமா?"

பொய்யாய் காதைப் பொத்திக் கொண்டாள்.

மீண்டும் என் கண்கள் எதிர் வீட்டில் போய் நிலைத்தன.

சம்யுக்தா!



''பெண்ணுக்கு ஐம்பது பவுன் நகை போடறோம். சீர் வரிசைகள் செய்யறோம். புடவை, துணிமணிகள் வாங்கிக் கொடுக்கறோம். பாத்திரங்கள் வாங்கிக் கொடுக்கறோம். பதிலுக்கு நீங்க என்ன செய்வீங்க?''

''இவை எல்லாம் போதாது; இன்னும் வேணும்னு சண்டை போடுவோம்!''

– லலிதா செல்லப்பா



''சே, எதுலதான் அரசியலை இழுக்கிற துன்னு ஒரு வகை தொகையே இல்லாமப் போச்சு...''

''என்ன ஆச்சு.?''

''தன் மகன் பத்தாவது ஃபெயில் ஆன துக்குத் தலைவர் மாபெரும் கண்டன பொதுக் கூட்டம் ஏற்பாடு பண்ணிட்டாரு!''

– பா. ஜெயக்குமார்

"வர வர மன்னர் செய்யற 'லொள்ளு' சகிக்க முடியலே..."

"ஏன் என்ன சொல்றார்?"

"அவர் பவனி வர ராஜபாட்டை குண்டும் குழியுமா இருக்காம். அதாலே பட்டத்து யானை யின் காலில் 'ஷாக் அப்சார்வர்' பொருத்தச் சொல்றார்!"

- குஞ்சிதபாதம்



இந்தப் பெயரை மனசு உச்சரிக்கும் போதே எனக்குள் ஆர்ப்பரிப்பு.

'ஏய், அரைக் கிழவா' என்று கெக் கலித்தது மனதிலிருந்து ஒரு குரல்.

எத்தனை வயதானால் என்ன? வாழ்க் கையில் சிலவற்றை எப்போதுமே மறக்க முடியாது.

முதல் காதல், முதல் சம்பளம், முதல் முத்தம், தன் குழந்தையின் முதல் ஸ்பரிசம்...

சம்யுக்தையை நான் சந்தித்தது இதே போன்ற வையாளித் திருவிழா அன்றுதான்.

அதோ அந்த எதிர் வீட்டில் இரு போர்ஷன்கள் உண்டு. மேலே மொட்டை மாடி. பழைய காலத்து வீடு அப்போது. ஒரு போர்ஷனில் என் நண்பன் மாதவன் குடும் பம். மற்றொரு போர்ஷனில் அவள் குடும் பம். குடிவந்து ஒரு வாரம் போலத் தானிருக்கும்.

வையாளி பார்க்க மாதவனுடன் நான். மொட்டை மாடிச் சுவர்க் கட்டையில் அமர்ந்திருந்தோம். மாடியெங்கும் மனிதர் கள். இங்கிருந்து பார்த்தால் பெருமாளும், குதிரை வாகனமும், அதன் ஓட்டமும் தெளி வாகத் தெரியும்.

யதேச்சையாய் என் பார்வை திரும்ப, 'அம்மா' என்ற குரலுடன் அவள் தடுமாறி சுவருக்கு மறுபக்கம் விழப் போக, என் உடலில் எப்படித்தான் அவ்வளவு வேகம் வந்ததோ! ஒரே தாவில் அவளருகில் சென்று, அவள் கரம் பற்றி, அவள் விழுவ தைத் தடுத்து விட்டேன்.

ஒரு நொடி, ஒரே நொடி அவள் பார் வையும், என் பார்வையும் ஒன்றுக்குள் ஒன்று அமிழ்ந்து போய், உலகம் மறக்க நின் றோம். அந்த நொடியில்தான் நாங்கள் காதல் தேவதையால் ஆசிர்வதிக்கப்பட் டோம்.

காலேஜ் படிப்பை முடித்து ரிசல்ட்டுக் காக காத்திருந்த எனக்கு, கூடுதலாய் காதல் படிப்பு. பத்தாவது முடித்து பதினொன் றாவது வகுப்புக்குச் செல்லத் தயாராய் அவள்.

அன்றிலிருந்து என் வாழ்க்கையே சுறுசுறுப்பாய் மாறிப் போனது.

காலை ஐந்து மணிக்கே எழ ஆரம் பித்தேன். வாசலில் கோலம் போடுகிறாளே. தினசரி மாலையில் தாயார் தரிசனம். அவளும் வருகிறாளே.

அவள் பார்வை என்னைத் தொட, என் இதயம் அவளைத் தொட, அவள் இதழ்க் கடை வெட்கப் புன்முறுவல் என்னைத்

தொட என மாறி மாறி எங்கள் காதல் கள்ளத்தனமாய் வளர்ந்தது.

'என்னவளின் கொலுசுச் சத்தமே எனக்குத் திருப்பாவை! என்னவளின் கைவளையோசையே பிரபந்தம்' என்றெல்லாம் எங்கள் தெருவில் வெளிவந்த கையெழுத்துப் பிரதியில் கவிதை எழுதினேன்.

''அதென்னடா 'பிருத்வி'ன்னு புனை பெயர்?'' என்று கேட்ட நண்பர்களுக்கு மழுப்பலாய் பதில் சொன்னேன்.

சம்யுக்தையை குதிரையில் கடத்திச் சென்ற பிருத்விராஜ் வரலாற்றைச் சொன்னால் கண்டுபிடித்து விடுவார்களே, எங்கள் காதலை.

ஆனால், ஒருநாள் திடீரென எங்கள் காதலில் முகாரி.

''ஒண்ணு விட்ட மாமா பையனுக்கு, சம்யுக்தையை கொடுக்கப் போறாளாம். பையன் போஸ்டல் டிபார்ட்மெண்ட். சென்ட்ரல் கவர்ன்மெண்ட் உத்தியோகம். கொடுத்து வைச்சவதான்.''

அம்மா யாரிடமோ சொல்லச் சொல்ல என் காதல் சமுத்திரத்தில் அலை நின்று விட்டது. ஏன், சமுத்திரமே வற்றி விட்டது.

இந்தக் காலம் போல அப்போதெல்லாம் காதல் பற்றியெல்லாம் பேச முடியாது. 'காதல்' என்பதே கெட்ட வார்த்தை.

உண்மை கண்ட கனவானது என் காதல். வேலை தேடி, பம்பாயிலிருக்கும் என் அத்தை வீட்டுக்கு ஓடினேன். கொஞ்ச நாளில் என் அப்பா இறந்து விட, அம்மாவையும் பம்பாய்க்கே அழைத்துக் கொண்டேன். செம்பூரிலேயே பிறந்து வளர்ந்த தமிழ்ப் பெண் எனக்கு மனைவியானாள்.

மெல்ல மெல்ல என் காதல் சூழ்நிலை மனதுக்குள் அடைக்கலமானது.

திடீரென எழுந்த ஆரவாரம் என் சிந்தனையைக் கலைத்தது.

''பெருமாள் அதோ வந்துட்டார்.''

என் பார்வை தேர் அருகில் சென்றது. அதோ ரங்கநாதர். குதிரை வாகனத்தில் கம்பீரமாய் வேட்டைக்குச் செல்லும் கோலத்தில், தன் மோகனச் சிரிப்புடன் ஆட்கொள்ள வருகிறார்.

காந்தமாய் என்னை ஈர்க்கும் அவர் உருவத்தில் லயித்து நின்றேன்.

இரவு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது என் மனைவி சொன்னாள்.

''இன்னிக்கு சாயந்திரம் என்ன தெரியுமா ஆச்சு, பெருமாளைப் பார்க்கற ஆவலில் கூட்டம் முன்பக்கம் தள்ள, ஒரு பொண்ணு கீழே விழுந்துட்டா. நம்ம கஸ்தூரிரங்கன்தான் சமயோசிதமாய் டக்குனு கைலாகு கொடுத்து அந்தப் பொண்ணைத் தூக்கி விட்டான். இல்லேன்னா, கூட்டத்துல மிதிபட்டு அந்தப் பொண்ணு கதி என்னாயிருக்குமோ, பாவம்!''

மகனின் பெருமையில் பூரித்தபடி சாதம் போட்டாள்.

இது நடந்த கொஞ்ச நாட்களில் என் மனைவி ஒரு புத்தகத்தை என்னிடம் நீட்டினாள்.

''நம்ம பையன் கஸ்தூரி, காலேஜ் மேகசினில் என்னமாய் கவிதை எழுதியிருக்கான் பாருங்கோ...''

பார்த்தேன். கவிதை முடிவில் 'நளன்' என்று இருந்தது.

அடுத்த நாள் கோவிலுக்குச் செல்லும் போது எதிரே வந்த பெண்ணை என் மனைவி நிறுத்தினாள்.

''நன்னாயிருக்கியா? ஏங்க, அன்னிக்கு வையாளியின் போது ஒரு பொண்ணு விழுந்து, நம்ம பையன் காப்பாத்தினான்னு சொன்னேனே, அவ இந்தப் பொண்ணு தான்!''

அழகாயிருந்தாள். பாந்தமாய் கைகுவித்தாள்.

''உன் பேர் என்னம்மா?'' என்றேன்.

''தமயந்தி'' என்றாள். ●




''யோவ், சொன்னா கேளுய்யா. நான் பல் பிடுங்கறது வாஸ்தவம்தான். ஆனா, பாம்புக்கெல்லாம் என்னால பிடுங்க முடியாது. எடுத்துக்கிட்டு போய்யா!''

– சீர்காழி கே. ஆர். வி.

# குறையொன்றுமில்லை

79

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**ப**கவானைப் பார்த்து, 'நீயே கதி' என்று பிரார்த்திக்கும்போது மனத்தில் வேறு கோரிக்கைகள் இருக்கலாமா...? இருக்கக் கூடாது! என்ன கோர வேண்டும்?

அவன் திருவடியில் நித்யம், அனவரதம், இளரொளி இளமை கெடுவதன் முன்னம் சேவித்து இருக்க வேண்டும் என்பது ஒன்றே கோரிக்கை.

வேங்கடத்தில் போய் நின்றோமானால் நம் பாவங்களையெல்லாம் பொசுக்கி எடுத்து விடுகிறது. அப்புறம் வேறு கோரிக்கைக்கு அங்கே இடம் ஏது...? வழுவிலா அடிமைகளாக - குற்றமில்லாத சேவகர்களாக நாம் அவன் திருவடி கைங்கர்யத்துக்குச் செல்ல வேண்டும். குற்றம்...?

பிரதிபிரயோஜனத்தை எதிர்பார்த்துப் போவது தான் குற்றம். இதைச் செய்தால் எதையாவது கொடுப்பான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தால் அதுதான் குற்றம்!

பிரஹலாதனைப் பார்த்து பரமாத்மா நரசிம்ஹன் கேட்கிறான். - 'மடியிலே உட்கார வைத்துக் கொண்டு, கட்டி அணைத்துக் கொண்டு "குழந்தாய்! நீ என்னிடத்திலே வரம் கேளடா, உனக்கு வரம் தருகிறேன். அந்தக் குழந்தை நினைக்கிறதாம் - 'இது என்ன பண்ட மாற்றுதல் வியாபாரமா?... நாம் பகவானைக் கை கூப்பி சேவித்தால் அவன் ஏதாவது கொடுக்க வேண்டும் என்று உண்டா? அவனிடத்திலே அதை - இதை கேட்கலாமா?' என்று நினைக்கிறதாம்!

ஆகையினாலே, அவன் கொடுக்கவில்லை என்றால் நம்மிடத்திலே ஏதோ குறை இருக்கிறது என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அவன் கொடுக்கும்படியான அளவுக்கு நாம் த்யாராகவில்லை என்று அர்த்தம். அதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

அவன் மேல் தப்பே கிடையாது. ஒரு தப்பையும் அவன் வைத்துக் கொள்ள மாட்டான். அவன் தப்புடையவனானால் அவனுக்கு பகவான் என்று பெயர் ஏது? நமக்கும் அவனுக்கும் வித்தியாசம் இல்லாமல் போய் விடுமே! ஆகையால், அவன் திருவடியை நாம் ஆச்ரயித்து பிரார்த்தித்தோமானால் என்ன கொடுக்க வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். எப்போது கொடுக்க வேண்டும் என்பதும் அவனுக்குத் தெரியும். அதனால் அவனிடத்திலே நீ யாசிக்காதே. வழுவில்லா அறிவை மட்டுமே நீ யாசிக்கலாம்! கோணலான அபிப்பிராயத்தோடு அவனிடத்திலே அடிமை பண்ணக்

# அருள் வாக்கு



கூடாது. சித்தமான கைங்கர்யம் பரிபூரண மாகக் கிடைக்க வேண்டும் என்று பக வானிடத்திலே பிரார்த்திக்க வேண்டும்.

நான் ஆத்மா; தேகம் அல்ல... அவன் பொருட்டே நான்; அவன் திருவடியில் நித்ய கைங்கர்யத்துக்காகவே நான் என்கிற ஞானம் நமக்கு ஏற்பட வேண்டும் என்பதற் காகத்தான் விஷ்ணுவைக் காட்டி ஈசா வாஸ்ய உபநிஷத் இதை ஸ்பஷ்டமாகச் சொல்கிறது.

போக்தா, போக்யம், பிரேரிதா என்று மூன்று குணங்களையும் சொன்னேன். முன்பு சொன்ன அமரத்துவம், வாத்ஸல்யம், உபாயம், உபேயம்... இவற்றோடு சேர்த்து ஏழு ஆயிற்று அல்லவா...?

எட்டாவதான குணம் சுபாஷ்ரயத்வம். அதாவது, பற்றுவதற்கு ஆச்ரயன் அவன். சுப மானவன், மங்களமானவன். பார்ப்பதற்கு ரமணீயமானவன், கண்ணுக்கே ஆச்சர்ய மாய் இருக்கக் கூடியவன், கருத்துக்கு இனி யவன் அவன்.

'மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்...!' - அது மாத்திரமல்ல. கண்ணுக்கு இனியனாய், கருத்துக்கு இனியனாய் இருப் பவனை நினைக்குந்தோறும் ஆனந்தம் ஏற் படுகிறது. அப்படி ஆனந்தத்தை விளைவிக் கும்படியான திவ்யமான சுடர். பிரகாசிக் கும்படியான திருமேனியுடையவன் பர மாத்மா.

பக்தர்களை ரக்ஷிப்பதற்காகவே அத்யாஸ் சர்யமான திருமேனி கொண்டுள்ளதால் அவன் சுபாஷ்ரயன். எங்கும் பரந்து எல்லா வஸ்துகளிலும் இருக்கும்படியான சர்வேச் வரன் ஒரு வடிவுடன் இருக்கிறான். அது தான் முக்கியம்!

அவன் ஒரு வடிவுடன் இருக்கிறான் என் றால் நாம் சேவிப்பதற்கு போக்யனாய், நமக்கு அனுக்கிரஹம் பண்ணுவதற்காகவே இருக்கிறான்.

சித்தாவலம்பனம் என்று பெயர் - சித்தத் துக்கு ஒரு அவலம்பனம். மனம் - புத்தி ஈடு பட வேண்டுமானால், அதற்கு ஒரு வஸ்து எதிரில் இருக்க வேண்டுமில்லையா... எங்கும் நிறைந்திருக்கிற பரமாத்மாவை நீ உபாசனை பண்ண வேண்டுமானால், எப்படிப் பண்ணு வது? கண்ணை மூடிக் கொண்டால், எல்லா வஸ்துக்களிலும் அவன் இருக்கிறான் என்று உபநிஷத் சொல்கிறது.

சஹஸ்ரநாமத்தில் விஷ்ணு என்று வரு கிறதே - சர்வ வியாபி - அவனை உபா ஸனை பண்ணு . . . என்று சொன் னால், அவனிடம் பக்தி செய் என்று அர்த்தம்.

பக்தி அவனிடத்திலே வை என்றால் எப் படி உபாஸிப்பது? அதற்கு ஒரு அவலம் பனம் - ஒரு பற்று இருக்க வேண்டு மில்லையா...?

அதற்காகத்தான் பகவான் நமக்காக - நாம் அவனை நினைப்பதற்காக - எங்கும் நிறைந்திருக்கும்படியான பரமாத்மா அத்யாச்சர்யமான ரூபத்தோடு காட்சி அளிக்கிறான். ஆகையினால் ஸ்வரூபம், ரூபம் எல்லாம் அவனே!

த்ருவனுக்கு - சின்னக் குழந்தைக்கு நார தர் உபதேசம் பண்ணுகிறபோது, 'கிரீடம், சங்கம், சக்கரம் வைத்திருக்கிறான், தேஜ ஸாய் விளங்குகிறான்... ' என்றெல்லாம் எடுத் துச் சொல்கிறார் பகவானைப் பற்றி. 'அந்த மாதிரி உருவத்தை மனத்திலே நினைத்துக் கொள்' என்கிறார். சங்க-சக்ராதிகளை தரித் துக் கொண்டிருக்கிறான். உத்தமமான நேத் ரம் அவனுக்கு. கிரீடத்தை அணிந்து கொண் டிருக்கிறான். அப்படி திவ்யமான வடிவோடு காட்சி அளிக்கும் எம் பெருமானுக்கு,

அதரபல்லவம் மிகவும் அழகு;
நேத்ரம் அழகு;
மந்தஸ்மிதம் அழகு;
கம்புக்ரீவம் - அந்தக் கழுத்து - அழகு-

அப்படி சமசமமாக வகிர்க்கப்பட்ட திவ்யமான அழகுடையவன் பரமாத்மா. அத னால்தான் ஆஞ்சநேயன் சொல்கிறான்: பனைக்குப் பனை தத்தித் திரியும் குரங் கினத்தைச் சேர்ந்த என்னுடைய ஹ்ருதயத் தையே கொள்ளை கொண்டவனாயிற்றே அவன்.

ரமயதிதி ராம: - எல்லாருடைய ஹ்ரு தயத்தையும் ஆகர்ஷிக்கிறவன் அவன். யோகிகளுடைய ஹ்ருதயங்களைக்கூட ஆகர் ஷிக்கிறவன். எல்லோரையும் ரஸிக்கப் பண்ணுகிறவன். அப்படிப்பட்ட ஏற்றமுடை யவன்!

பாற்கடலைக் கடைந்தபோது முதலில் விஷம் வந்தது; அப்புறம்தான் அம்ருதம் வந்தது. கடைந்து கடைந்து முதலில் அதிலிருக்கிற கெட்டதை எல்லாம் விஷ ரூபத்தில் திரட்டி வெளிப்படுத்திய அப்புறந்தான், நல்லதான அம்ருதம் வந்தது. நம்முடைய வாழ்க்கையையும் ஸம்ஸாரத்தையும் இப்படிக் கடைய வேண்டும். தன்னாலே அது அலை அடித்துக் கொண்டிருப்பதுதான். காம, க்ரோதாதிகளான பல சலனங்களால் அது அலை வீசிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதற்குள்ளேயே ஈச்வர தத்வமும் அம்ருதம் போல் இருக்கத்தான் செய்கிறது. இந்த ஸம்ஸாரக் கடலை நன்றாகக் கடைந்து காம, க்ரோதாதிகள் விஷமாகத் திரண்டு வெளியே போகும்படி செய்து விட்டால், அப்புறம் திவ்ய அநுபவம், ஈச்வர ஸாக்ஷாத்காரம் என்கிற அம்ருதம் வந்து விடும். முதலில் கெட்டதை எல்லாம் திரட்ட வேண்டும். எதற்காக என்றால் வைத்துக் கொண்டு அநுபவிப்பதற்காக அல்ல; வெளியிலே தூரத்துவதற்காகத்தான்! குப்பையை எல்லாம் ஒரு இடமாகப் பெருக்கித் திரட்டி வெளியிலே கொட்டுவதுபோல! அப்படி வெளியிலே தூரத்துகிறவரை கெட்டதுகள் இருக்கத்தான் செய்யும்; அவற்றை பகவானே மத்தாக வந்து ஒன்றாகச் சேர்த்து ஒரு இடத்தில் concentrate செய்து (திரட்டிக்) கொடுக்கிறான். பூஜை, க்ஷேத்ராடனம், ஸ்தோத்ரம் படிப்பது, ஜபம், த்யானம் என்கிற ஸாதனையெல்லாம் பகவானின் அநுக்ரஹ ஸ்வரூபம் தான். இப்படிப்பட்ட ஸாதனைகளால் வாழ்க்கைக் கடலைக் கடைந்து முதலில் விஷத்தைத் திரட்ட வேண்டும். பிறகு, அதை வெளியே அனுப்பிவிட வேண்டும். அப்புறம் அம்ருதத்தை அடைய வேண்டும்.

ஆகக் கூடி, எடுத்தவுடன் அம்ருதம் வேண்டும் என்றால் முடியாது. விஷத்தை அநுபவித்துத் தீர்த்தபின்தான் அம்ருதம் வரும். வாழ்க்கையில் கெட்டது, கஷ்டம், காம க்ரோதம் எல்லாம் இருந்துதான் ஆக வேண்டும். போகப் போக இதையெல்லாம் விலக்கிவிட்டு ஒரே நல்லதாக, பேரின்பமாக ஆக வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்

அந்த வடிவழகைப் பார்த்துத்தான் 'மறவாதார் பிறவாதாரே' என்றார் ஆழ்வார்.

வடிவழகிலே ஈடுபட்டவர்களுக்குப் பிறவி ஏது? அப்படி அப்ராக்ருதமான திவ்ய மங்கள ரூபத்துடன் காட்சியளிக்கக் கூடியவன் அவன். அவதார காலத்திலேயும் அப்படித்தான் அழகோடு வந்தான்.

அந்த அழகிலே சூர்ப்பணகை ஈடுபட்டு, மூக்கறுபட்டு, காதறுபட்டுப் போய்ச் சேர்ந்தாள். கரனிடத்திலே போய் அவள் தனக்கு நேர்ந்ததைச் சொல்கிறாள்.

சொல்லுகிறபோது, 'யார் உன்னை இப்படிப் பண்ணினார்கள்?' என்று கேட்டால், 'இளமை மிக்கவன்; மகாபலம் பொருந்தியவன்...' என்று ராமனை ஸ்தோத்திரம் பண்ணுகிறாள்!

– இவ்வளவு நேர்ந்திருக்கிறது அவளுக்கு! காது அறுந்து ரத்தம் கொட்டுகிறது. மூக்கு அறுபட்டு ரத்தமாகக் கொட்டுகிறது. அவ்வளவு நோவுக்கு இடையிலேயும் ராமனின் ரமணீயத்தை அவள் மறக்கவில்லை.

அதனால்தான் பராசர பட்டர் சஹஸ்ர நாமத்துக்கு பாஷ்யம் எழுதிய மகான், அவர் கேட்கிறார். 'ராமனை அதிகம் ஸ்தோத்திரம் பண்ணியவர்கள் ராவண குடும்பத்தினர் தானோ...?' என்று!

கவனித்துப் பார்த்தோமானால் பரம வைரியான – எதிரியான ராவண குடும்பம் தான் ராமனை ரொம்ப ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறது!

கும்பகர்ணன் ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறான்.

சூர்ப்பனகை ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறாள்.

ராவணனே ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறான் –

கடைசியிலே:

'அவனை நாராயணன் என்று நான் உணர்கிறேன். அவன்தான் நாராயணன் என்பது நன்றாகத் தெரியும்' என்கிறான்.

பின் ஏன் இப்படி அபசாரப்பட்டான் ராவணன்...?

இயற்கையிலேயே ஒரு குணம் வந்து விட்டது அவனுக்கு. சுவபாவத்தை மாற்றிக் கொள்ள முடியவில்லை.

'யாருக்கும் வணங்காதவன் நான்; (வணங்கலில் அரக்கன்' என்று அவனுக்குப் பெயர்) அதனால் வணங்க விடாமல் அந்தக் குணம் கெடுக்கிறதேயொழிய அவன் நாராயணன் என்பது எனக்குத் தெரியும்'' என்கிறான் ராவணன்.

ஆகையாலே சுவபாவம் – அதாவது இயற்கையாக அமைந்த குணம் இருக்கிறதே.. அது கடைசி வரை மாறாது. இதற்கு உதாரணமாக ஒரு கதை உண்டு – எலி, புலியான கதை! அதை அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

போட்டிக் கதை – 6

# வழிகள்

**வீ**லைத் தட்டியதும் சேதுவின் முகத்தில் தெறித்தது அந்த அசிங்கம். எங்கே மிதித்து விட்டு வந்ததோ, நாற்றம் குடலைப் புரட்டிக் கொண்டு வந்தது சேதுவுக்கு. கையில் இருந்த வேஸ்ட்டால் முகத்தை அழுந்தித் துடைத்தான். அதுவும் சொதசொதவென்று ஊறியிருந்த டீசல் வேஸ்ட். அசிங்கத்தைத் துடைத்த முகத்திலிருந்து டீசல் வழிந்தது. அசிங்கத்தின் நாற்றத்தோடு, டீசல் வேறு சேர்ந்து கொள்ள, என்னவோ போலாகி 'உவ்வே...' என்று வாந்தியெடுத்தான்.

கையில் இருந்த டீசல் வேஸ்ட்டை தூர எறிந்து விட்டு, நல்ல வேஸ்ட்டால் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டான். நாற்றம் குறைவதாய்க் காணோம். கார்களைக் கழுவ வைத்திருக்கும் 'சோப் ஆயிலை' எடுத்துக் கொண்டு தொட்டிப் பக்கம் ஓடினான். தண்ணீரை இறைத்து இறைத்து நான்கைந்து முறை கழுவினான். மறுபடியும் ஒருமுறை உலர்ந்த வேஸ்ட்டால் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டான். அப்படியும் நாற்றம் அடிப்பது போலவே இருந்தது சேதுவுக்கு. ரெஸ்ட் ரூமுக்குள் நுழைந்து ஒரு சேரில் சாய்ந்து அமர்ந்து, கண்களை அழுந்த மூடிக் கொண்டான்.

சேதுவுக்கு தன் நிலையை நினைத்து ஒரு கணம் அழுகையாய் வந்தது. டிப்ளமோ முடித்து, இரண்டு வருடம் கழித்து இப்படி ஒரு வண்டி கழுவும் வேலைக்கு வருவோம் என்று துளியும் நினைக்கவில்லை அவன். ஒரு நல்ல கம்பெனியில் சூப்பர்வைஸராகவோ, அஸிஸ்டென்ட் என்ஜினீயராகவோ வரவேண்டியவன்; இப்படிக் கார் துடைத்துக் கொண்டிருக்கிறேனே என்று எண்ணும்போதே கடுப்பாய் இருந்தது.

படிக்கும் போது கனவுகளுடன்தான் படித்தான். டிப்ளமோ இன் மெக்கானிகல் இன்ஜினீயரிங். வாய்ப்புகள் அதிகம் உள்ள கோர்ஸ். படித்து முடித்ததும் வேலைக்கான கதவுகள் உங்களுக்காக விரியத் திறந்து காத்திருக்கின்றன என்று ஊர் சொன்னது. ஆசிரியர்களும் அதையேதான் சொன்னார்கள். ஆனால், படித்து முடித்து வெளியே வந்ததும், காத்திருந்த உலகமோ மகா குரூரமாய் இருந்தது சேதுவுக்கு.

எக்ஸாம் முடித்து ஏதும் வேலைக்குப் போகலாம் என்று முயற்சி செய்யும் போது, "ரிசல்ட் வந்துடட்டும்பா...'' என்றார்கள். ரிசல்ட் வந்ததும் போனால் எல்லோரும் தவறாமல், "எக்ஸ்பீரியன்ஸ் இருக்கா?'' என்றார்கள். சேதுவுக்கு குழப்பமாய் இருந்தது. யாருமே வேலை தராமல் எக்ஸ்பீரியன்ஸ் மட்டும் எப்படி வரும்? புரியவேயில்லை.

ஆறு மாதங்கள் போராடி ஒரு வேலை கிடைத்தது. ஆட்டோமொபைல் ஸ்டோர் பார்ட்ஸ் விற்கும் சேல்ஸ்மேன் வேலை. இன்சர்ட் செய்த ஃபுல் சர்ட்டும், டையுமாய் ஷூவுடன் வெயிலில் சும்மா அலைவதே கஷ்டம். பத்தாதற்கு ஒரு சூட்கேஸும், அது நிறைய ஆட்டோ பார்ட்ஸ் சாம்பிள்களும், அதன் குணங்களை விளம்பரப்படுத்தும் துண்டுப் பிரசுரங்களும்.

பஸ்ஸில் ஏறிக் கடை

களுக்குப் போய்ச் சேருவதற்குள், பெட்டியின் சுமை தாங்காமல் கை இற்றுவிடும் போலிருக்கும். உள்ளே வியர்வை கசகசக்க கடையேறியதும், கடைக்காரன் ஏதோ விலங்கைப் பார்ப்பதைப் போல பார்ப்பான். முதல் கேள்வியே 'கடனாத் தருவீங்களா?' என்பதாய்த்தானிருக்கும்.

''நீங்க வேற பொட்டியத் தூக்கிட்டு வந்துட்டீங்க! ஏற்கெனவே மார்க்கெட்ல நெறைய நல்ல ப்ராடக்ட்ஸ் இருக்கு சார். இது புதுசு! விக்குமா, விக்கா தானு தெரியாது. காசு இதுல மொடக்க முடியாதுல்ல. வேணும்னா ஒரு அம்பது பீஸ் போட்டுட்டுப் போங்க. ஆனா, வித்தாத்தான் காசு தருவேன்.''



சரி என்று கொடுத்து விட்டுப் போனால் பொருளுக்கோ, பைசாவுக்கோ உத்தரவாதம் கிடையாது. அதனால், காசு கொடுத்தால் தான் பொருட்கள் டெலிவரி என்று ஓனர் பிடிவாதமாய் நின்றார். கொடுமையாய் மாதம் பூரா. அலைந்தாலும் ஒன்றிரண்டு கடைகள் கூட கிடைக்கவில்லை. இரண்டு மாதம் ஆனதும் ஓனர் கத்த ஆரம்பித்தார்.

''போன மாசம் பூரா சேர்ந்து இருபது பீஸ் கூட நகரலை. இதுக்குச் சம்பளம் ஆயிரம் ரூபா. டெய்லி பேட்டா இருபது. என்னதான் நெனச்சுட்டிருக்க? இதோ பார் இந்தப் பொண்ணு. வேலைக்குச் சேந்து மூணு வாரம் கூட ஆகல. இந்த நாலு நாள்ல மட்டும் பதினெட்டு பீஸ் வித்திருக்கா. நீயும்தான் இருக்கியே! போ.. போ... நிக்காத!''

சேதுவுக்கு அவமானமாய் இருந்தது. அலுவலகத்தில் எல்லோர் முன்னிலையும் ஓனர் கத்திவிட்டுப் போய் விட்டார். அதுவும் சேர்ந்து ஒரு மாதம் கூட ஆகாத அந்த சேல்ஸ்வுமன் எதிரில். சேலையைக் கட்டிக் கொண்டு, ஒரு ஹேண்ட் பேகில் ஸ்பேர்ஸைத் தூக்கிக் கொண்டு போகும் பெண்ணோடு தன்னை ஒப்பிட்டுப் பேசியது தாங்க முடியவில்லை சேதுவுக்கு. மறுநாளே தனது ராஜினாமாக் கடிதத்தைத் தபாலில் அனுப்பினான். சம்பள பாக்கி கேட்டுக் கூட போகவில்லை. பொருட்கள் எல்லாம் விற்காமல் பைத்தியம் பிடித்து அலையட்டும் அவன் என்று நினைத்துக் கொண்டான்.

## சத்யம் – சுந்தரம்

அதற்கப்புறம் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள். அங்கே, இங்கே போராடி எங்கும் வேலை கிடைக்கவில்லை. பிறகு, அப்பா யாரையோ பிடித்து, சிபாரிசு பண்ணி இந்தக் கார் கம்பெனிக்கு அனுப்பினார். மெய்ன் ரோட்டில் பெரிய ஷோரூம், சர்வீஸ் ஸ்டேஷனுடன் கூடிய டீலர்ஷிப் கம்பெனி அது.

இன்டர்வியூ வந்தபோது ஷோரூம் எங்கும் சீருடையில் இளம்பெண்கள். ஸ்டோர்ஸ், ரிசப்ஷன், டெலிபோன்

ஆப்பரேட்டர், கம்ப்யூட்டர் - ஜெராக்ஸ் என்று புதுக் கார்களுக்குப் போட்டியாய் அழகிய பெண்கள். இப்படி எங்கும் பெண்கள் வேலை செய்வதால்தான் ஆண் களுக்கு வேலைத் தட்டுப்பாடு ஆகிறதோ என்று தோன்றியது சேதுவுக்கு.

அஸிஸ்டென்ட் மானேஜர்தான் இன்டர்வியூ பண்ணினார்.

"இங்க பாருங்க சேதுராமன்.. உங்க படிப்புக்கோ, வேற எதுக்காகவோ இங்க வேலை கொடுக்கலை. உங்கள ரெகமண்ட் செஞ்சவர் எங்க கம்பெனியோட வெல்விஷர்; அவருக்காகத்தான். ஆனா... கவலைப்படாதீங்க. உங்கள நல்லா ட்ரெய்ன்-அப் பண்ணிடுவோம். உங்களுக்கு



"அவரு எது செஞ்சாலும் கொஞ்சம் ஆடம்பரமாத்தான் செய்வாரு!"

"அதுக்காக... தீபாவளிக்கு பட்டாசு வெடிக்க ஆட்கள் தேவைன்னு விளம் பரம் செய்யறது சரியில்ல.."

– குமாரபாளையம் 'தேவி' கணேஷ்

இங்கே என்ன போஸ்ட், எந்த ஏரியாங் கறதை மூணு மாசம் கழிச்சுத்தான் அலாட் பண்ணுவோம். ஆனா, பேஸிக்கா அந்த மூணு மாசம் நீங்க எந்த செக்‌ஷன்ல போட் டாலும் வேலை செஞ்சாகணும். தகுதி பார்க்காம, சின்சியரா வொர்க் பண்ண ணும்."

ஏ.எம். மேஜைக்கு வந்த டீயை எடுத்துக் கொண்டு, அவனையும் எடுத்துக் கொள்ளச் சொன்னார்.

"முதல் ஒரு மாசம் கிளீனிங் அண்ட் சர்வீசிங். ரெண்டு செக்‌ஷன்லயும் வொர்க் பண்ணியாகணும். என்னடா, டிப்ளமோ முடிச்ச நம்மள கார் கழுவ அனுப்பறாங் களேன்னு நெனைக்காதீங்க. இருபது வருஷம் முன்னாடி டிப்ளமோங்கறதெல்லாம் பெரிய படிப்பு. அன்னிக்கு அத முடிச்சுட்டு வந்த தும் நா செஞ்ச மொத வேல கிளீனிங்தான். கிளீன் பண்ணும் போதுதான் எங்கெங்க எந்தெந்த பார்ட்ஸ் இருக்குன்னே தெரிஞ் சுக்க முடிஞ்சது. கீழ்மட்டத்து வேலைனு நெனைக்காம, அதுல என்னென்ன கஷ்டங் கள் இருக்குனு தெரிஞ்சுக்கிட்டதாலதான், இன்னிக்கு இந்தப் போஸ்ட்ல என்னால நல்லவிதமா சக்ஸஸ் பண்ண முடியுது. உங் களாலயும் முடியும்னு நெனைக்கிறேன். இன்னிக்கே டியூட்டில ஜாய்ன் பண்ணி டுங்க. விஷ் யு ஆல் த பெஸ்ட்!"

சேதுவுக்கு எரிச்சலாய் வந்தது. எங் கேயும் படிப்பை மதிக்கவே மாட்டேனென் கிறார்கள். டிப்ளமோ முடித்த என்னை கார் கழுவ அனுப்பணும்; அதுக்கு ஆயிரத் தெட்டு காரணம் சொல்கிறான் இந்த ஏ.எம். இப்போதே இந்த வேலை வேண்டாமென்று சொல்ல வேண்டுமென்று தோன்றியது. இந்த வேலைக்கு அப்பா அலைந்த அலைச் சல்கள் ஒருகணம் கண்முன் தோன்றியது. 'ச்சே... என்ன மனுஷன்கள்!' சேது நொந்து கொண்டே சர்வீஸ் ஸ்டேஷன் உள்ளே காலை வைத்தான்.

சேது நினைத்ததை விட மோசமாய் இருந்தது சர்வீஸ் ஸ்டேஷன். ரங்கசாமி என்றொரு வயதான மடையன்தான் இன் சார்ஜ். மரியாதை என்றால் என்னவென்றே தெரியாத ஜந்து அவன். போன முதல் நாளே கடித்துக் குதறினான்.

"இங்க பாரு... படிச்ச பையன், அது இதுன்னெல்லாம் பாக்க மாட்டேன். ஒழுங்கா வேலை செய்யணும். இந்த ட்ரஸ் ஸெல்லாம் மூட்டை கட்டி வச்சுட்டு, நாளைக்கு வரும் போது வொர்க்கிங் ட்ரஸ் கொண்டு வந்துடணும்... என்ன?"

சரி என்பது போல் தலையாட்டினான் சேது. ரங்கசாமி படித்தவன் இல்லையாம். ஆனால், கார்கள் அத்துபடி.. வண்டி உள்ளே நுழையும்போதே என்ன ரிப்பேர் என்று சொல்லிவிடும் அளவு எக்ஸ்பீரியன்ஸ். கம்பெனி ஆரம்பித்ததும் சேர்ந்த முதல் நபர். அதனால் முதலாளி வரை செல் வாக்கு. எல்லோரும் அவனிடம், "அண்ணே, அண்ணே" என்று குழைந்தார்கள். சேது வுக்கு அவனை அப்படி அழைக்கவே பிடிக்கவில்லை. இப்பவே இப்படித் திட்டு கிறவனை 'அண்ணே' என்றால் ரொம்பவே

ஏறிவிடும்.

ஏ.எம்.மிடம் இது பற்றிப் புகார் சொன்னபோது, "அதுதான் அவர் குணம் சேது. படபடனு பேசுவாரே தவிர ரங்க சாமி ரொம்ப நல்லவர். நான் வந்தப்ப இன்னும் வேகம் ஜாஸ்தி. தப்பா ஒரு ஸ்பேனரைக் கொடுத்தா அதாலயே நம்மள வீசி அடிப்பாரு. நானே அடியெல்லாம் வாங்கிருக்கேன். அந்த ஆள் பேசறதப் பத்திக் கவலைப்படாம, நமக்குத் தேவையான விஷயத்தை மட்டும் கத்துக்கப் பாருங்க!" அதற்கப்புறம் ரங்கசாமி பற்றிப் பேசுவதை நிறுத்தி விட்டான்.

இன்றும் அப்படித்தான். காலையிலேயே ரங்கசாமி ஏதோ திட்டிவிட்டுப் போக, வேலை செய்யவே கடுப்பாயிருந்தது சேதுவுக்கு. திட்டு வாங்கி வேலை செய்யும்போது, ஏதோ கேவலமான வேலை செய்வது போலிருந்தது. வந்த கார்களையெல்லாம், ஏனோதானோவென்று கழுவி அனுப்பினான். இந்தக் காரை ரேம்ப்பில் ஏற்றும் போது கூட வேண்டாமென்றுதான் தோன்றியது. ஏற்றியாகி விட்டது. தினசரி இருபது கார்கள் இவன் டெலிவரி கொடுத்தாக வேண்டும். அவசரத்தில், டயரில் ஏதோ கறுப்பாய் இருக்கிறதே என்று எல்லாப் பக்கமும் துடைத்த மசல் வேஸ்ட்டால் துடைத்து விட்டு, கையால் தட்டியதும்தான் முகத்தில் தெறித்தது - நாற்றமாய் அந்த அசிங்கம்.

என்ன வேலை இது என்று நினைத்துக் கொண்டிருக்கும் போது ரங்கசாமி அந்தப் பக்கம் வந்தான். "டேய்... என்ன ரெஸ்ட் ரூம்ல உக்காந்துட்டிருக்க? வேல நேரத்துல இப்பிடிப் போயி உக்காந்திட்டீனா காரெல்லாம் உங்க தாத்தனா கழுவுவான்?" ரங்கசாமியின் வாயிலிருந்து வார்த்தைகள் சேதுவை நோக்கி அமிலமாய் உதிர்ந்தன.

"இல்லண்ணே... அவனுக்கு உடம்பு சரியில்ல போலருக்கு. கொஞ்சம் முன்னாடி வாந்தியெல்லாம் எடுத்துட்டிருந்தான்..." கிளீனிங் செக்‌ஷனிலிருந்த வேறொரு பையன் ரங்கசாமிக்குத் தகவல் சொன்னான்.

"உடம்பு சரியில்லைன்னா ஏண்டா வேலைக்கு வர்றீங்க?" ரங்கசாமி எரிச்சலுடன் சொல்லியவாறு நகர்ந்தான்.

மனுசனா இவன்? சேதுவுக்கு எழுந்து போய் அவனை ஓங்கி அறைய வேண்டும் போலிருந்தது. அவனும், அவன் மூஞ்சியும் என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே இன்டர்காம் ஒலித்தது. ரிஸீவரை எடுத்து, "ஹலோ... சேது ஹியர்!" என்றார்.

"ஹலோ சேதுவா? நா ஏ.எம். பேசறேன். இங்க கெஸ்ட் வந்திருக்காங்க. கேன்டீனுக்கு போன் செஞ்சா இன்டர்காம் வொர்க் பண்ணலை போலருக்கு. இஃப் யு டோண்ட் மைன்ட்... எதிர்லதான கேண்டீன். ஒரு நாலு டீ கொடுத்து விடச் சொல்றியா... ப்ளீஸ்!"

"சரி சார்!" ரிஸீவரைப் பட்டென்று வைத்தான் சேது. மனசுக்குள் எரிச்சல் மண்டியது. 'என்னதான் நெனச்சுக்கிட்டிருக்கானுக இவனுக? இவனுகளுக்கெல்லாம் வண்டி துடைக்கவும், திட்டு வாங்கவும், டீ சொல்லவுமா நான் கஷ்டப்பட்டுப் படித்தேன். வேலை இல்லாட்டியும் பரவால்ல, இப்படி அவமானப்படறதுக்கு வீட்லயே இருக்கலாம்!'

சேது கடுப்போடு ரங்கசாமியிடம் சென்று உடம்பு சரியில்லை என்று சொல்லி விட்டுக் கிளம்பினான்.

மறுநாள் பத்து மணிக்கு அலுவலகத்துக்கு சேது வந்த போது, அவன் கையில் ராஜினாமாக் கடிதம் இருந்தது. ரிசப்ஷனில் புதிதாய் இரண்டு பெண்கள் பைலோடு உட்கார்ந்திருந்தார்கள். இன்னும் ரெண்டு பசங்களோட வேலைக்கு வேட்டு வைக்கப் போகிறார்கள். சேது விடுவிடுவென்று ஏ.எம்.



**"என்னது, நீதிமன்றத்தில் ஒரே கலாட்டாவா இருக்குது?"**

**"யாரோ நீதிபதியின் மேஜைமேல் 'கேப்' துவி வைச்சுட்டாங்க போலருக்கு. அவரு 'ஆர்டர் ஆர்டர்'னு சுத்தியால மேஜையைத் தட்டறப்ப வெடிச்சுடிச்சி. அதான்!"**

**- சீர்காழி கே.ஆர்.வி.**

அறையை நோக்கி நடந்தான்.

கதவைத் தள்ளக் கை வைத்தபோது உள்ளே ஜி.எம்.மின் குரல் கேட்டது. "கிளீனிங் செக்ஷனுக்கு பெண்களா? என்ன தேவை ஏ.எம்.? இப்பவே அந்த செக்ஷன்ல ஆளுக அதிகமா இருக்கும் போலருக்கே?"

ஏ.எம். பதில் சொன்னார்.

"எங்க சார்... இப்ப வர்ற பசங்க எல்லாம் ஸ்ட்ரெய்ட்டா பெரிய போஸ்ட்டுக்கு வரணும்னு எதிர்பார்க்கிறாங்க! கிளீனிங் செக்ஷன்ல வேலை பாக்கறதைக் கேவலமா நெனைக்கறதால பசங்களும் நெலச்சு நின்னு வேலை பாக்கறதில்ல. கீழ்மட்டத்துல என்ன கஷ்டப்படறாங்கன்னு கவனிக்கக் கூட ஆசைப்படறதில்லை. ஆனா தனக்கு, மேலதிகாரி சொகுசா கார்ல வந்து கையெழுத்துப் போடற மாதிரி, கையெழுத்துப் போட்டுட்டுப் போற வேலை வேணும்னு நெனைக்கறானுக. போடற கையெழுத்த தப்பான எடத்துல போட்டா வேலைக்கே வேட்டுங்கறதும், அந்தப் பொஸிஷன் வர்றதுக்கு அவங்க எவ்ளோ கஷ்டப்பட்டிருப்பாங்கன்னும் கூட யோசிக்கறதில்ல. அடிப்படை அறிவு இல்லாம, படிச்ச படிப்பை மட்டுமே வச்சு மேலதிகாரியா சக்ஸஸ் பண்ண முடியாதுங்கறது கூட தெரியல; தெரிஞ்சுக்க ஆசைப்படறதும் இல்ல.''

**''என்னமோ உங்க பெண்ணுக்கு தலை தீபாவளின்னு சொன்னீங்க. வீட்ல வெடி சத்தத்தையே காணோமே?''**

**''அத ஏன் கேக்கறீங்க. மாப்பிள்ளை 'பாம் ஸ்குவாட்'–ல வேலை பாக்குறவரா, பழக்க தோஷத்துல எல்லா 'வெடி'யையும் செயலிழக்க வச்சிட்டாரு.''**

**– சீர்காழி கே.ஆர்.வி.**

ஏ.எம். சற்று நிறுத்தித் தொடர்ந்தார்.

"இதோ இன்னிக்கு ரெண்டு பொண்ணுங்க கிளீனிங் செக்ஷன்லதான் வேலையிருக்குனு சொன்னா, அதுக்கு தயார்னு ரிசப்ஷன்ல உட்கார்ந்திருக்காங்க. செய்யற வேலைல என்ன கௌரவம் பாக்க வேண்டியிருக்குன்னு பொண்ணுகளுக்குத் தெரிஞ்ச அளவு பசங்களுக்குத் தெரியலை. வெள்ளைச் சட்டை கசங்காம வேலை வேணும். வெளிய சொல்ல கௌரவமான வேலை வேணும்னுதான் அலையறாங்களே ஒழிய, கௌரவம் பாக்காம வந்தா எத்தன வேலை காத்துக்கிட்டிருக்குனு கூட தெரியறதில்லை. அப்படி மீறி கெடைக்கற வேலையையும் சின்சியரா செய்யறது கிடையாது. சிகரெட் பிடிக்க, கேன்டீனுக்குப் போகன்னு வேலை நேரத்துல வெட்டியாப் பொழுதப் போக்கறானுக. ஆனா, பொண்ணுங்ககிட்ட அந்தக் குணம் கிடையாது. சின்சியாரிட்டி இருக்கு. கௌரவம் பாக்கறதும் இல்ல. அதனாலதான் அவங்க எல்லாத் துறையிலயும் சக்ஸஸ் ஆயிட்டிருக்காங்க. எனக்கு நாம புதுசா ரெக்ரூட் பண்ண சேது மேல கூட நம்பிக்கையில்ல. அவனும் ஒரு சராசரி இளைஞனாத்தான் இருக்கான். கத்துக்கறதை விட அதிகமா கௌரவம் பாக்கறவன் வேலை செய்ய மாட்டான். அவன் போறதுக்குள்ள ரெண்டு பொண்ணுங்கள அந்த செக்ஷன்ல ட்ரெய்ன்–அப் பண்ணிட்டா யூஸ்-புல்லா இருக்கும்னு நெனைக்கிறேன்."

ஏ.எம். பேசிக் கொண்டே போக சேது வந்த வழியே திரும்பினான். தன் தவறு எங்கே என்று புரிந்தது. எந்த வேலையாய் இருந்தால் என்ன? கௌரவம் பார்க்காமல் கடுமையாய் உழைத்தால் வெற்றி வராமலா போகப் போகிறது என்று தோன்றியது. இங்கேயே ஜெயிக்க முடியும் என்று தோன்றியது.

கையிலிருந்த ராஜினாமாக் கடிதத்தை கிழித்தெறிந்து விட்டு, சர்வீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைந்ததும் ரங்கசாமி காட்டுக் கத்தாய்க் கத்தினான்.

"தொரை... வேலைக்கு வர இதுதான் நேரமா? ஒரு ஒழுங்கு வேணாம்? வாடா... அந்தப் பத்து பதினொன்னு ஸ்பேனரை எடு!"

வழக்கமாய் பதிலுக்குக் கோபமாய் முறைக்கும் சேது, "இதோ... வொர்க்கிங் ட்ரஸ் மாத்திட்டு வந்துடறேண்ணே!" என்று உள்ளே ஓடினான். ○

# காதில் விழுந்தவை!

● தமிழ்நாடு காங்கிரஸ் கட்சிக்கு இன்னமும் நிர்வாகிகள் நியமிக்கப்படவில்லை. தலைவர் திண்டிவனம் ராமமூர்த்தி கொடுத்த பட்டியல் ஒரு பக்கம் இருக்க, பிரபு, குமரி அனந்தன் போன்றோரும் ஆளாளுக்கு ஒரு பட்டியல் கொடுத்திருக்கிறார்கள். புதிய நிர்வாகிகள் நியமிக்கப்பட்டால் கோஷ்டிப் பூசல் தீவிரமாகும் என்று மேலிடம் மௌனம் காக்கிறது. இப்போது எல்லா கோஷ்டியையும்விட வலுவான கோஷ்டியாக புதிதாக உருவாகி இருக்கிறது மணி சங்கர் அய்யர் கோஷ்டி. எழும்பூரில் அழகு நிலையம் நடத்தும் பெண்மணி ஒருவர் மூலம், மணிசங்கரிடம் ஒரு நிர்வாகிகள் லிஸ்ட் கொடுக்கப்பட்டுள்ளதாம். தமிழ்நாடு காங்கிரஸில் புதிய அதிகார மையமாக உருவாகி இருக்கிறார் அந்தப் பெண்மணி. திண்டிவனம் திண்டாடும்வண்மாக இருக்கிறார்.

● மத்தியிலிருந்து முக்கியமான நபர்கள் வந்து சந்திக்கும்போது அம்மா மறக்காமல் வலியுறுத்துவது, மத்திய அரசில் அ.இ. அ.தி.மு.க.விற்கு இன்னமும் முக்கியமான பொறுப்புகள் கொடுக்கப்பட வேண்டுமென்பதுதான். வர இருக்கும் மத்திய அமைச்சரவை விஸ்தரிப்பில் திண்டுக்கல் சீனிவாசன், ராஜா பரமசிவம் ஆகியோருக்கு அதிர்ஷ்டம் அடிக்கும் என்று சொல்கிறார்கள். அம்மா காலத்தில் 'பச்சை குத்தாத' அ.தி.மு.க.வினராக இருந்த சில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மத்திய அரசுப் பணிகளுக்குச் சத்தம் போடாமல் சென்று கொண்டிருக்கிறார்கள். இந்த அதிகாரிகள் தில்லியில் அ.தி.மு.க. அமைச்சர்களுக்கு தனிச் செயலாளர்களாக நியமிக்கப்பட இருக்கிறார்கள். அமைச்சரவை விஸ்தரிப்பில், உள்நாட்டுப் பாதுகாப்பு மற்றும் செய்தி-ஒளி பரப்புத் துறையும் அ.தி.மு.க.வுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்பதே அம்மாவின் முக்கிய கோரிக்கையாம். சூரியத் தொலைக்காட்சியை சங்கடத்தில் ஆழ்த்த தகவல் ஒளிபரப்புத்துறை தன் கைவசம் இருக்க வேண்டும் என்று அம்மா கருதுகிறாராம். தரைவழி போக்குவரத்து வேண்டாம் என்கிறார் அம்மா. கட்சியில் அதிரடியாகச் சிலரை நீக்கி வரும் அம்மா, அமைச்சரவை விஸ்தரிப்பின்போது, சேடப்பட்டிக்கு மீண்டும் அமைச்சர் பொறுப்பு வாங்கிக் கொடுப்பார் என்பது போயஸ் தோட்டத்திலிருந்து வரும் நம்பகமான தகவல். சசிகலா சிபாரிசு என்றால் தட்ட முடியுமா என்ன?

● கட்டுப்பாடு என்றால், மிலிட்டரி கட்டுப்பாடு. பா.ஜ.க.வைப் பற்றித்தான் சொல்கிறோம். ஆனால் தமிழக பா.ஜ.க.வில் சில முணுமுணுப்புகள். கட்சியின் நிதி வசூல் விவகாரத்தில் கேள்விகள் எழுப்பும் கடிதங்கள் கட்சியின் முக்கியப் பிரமுகர்களுக்கு எழுதப்பட்டுள்ளன. செயற்குழுவில் இந்த விவகாரத்தைக் கிளப்ப வேண்டுமென்று கையெழுத்திடாத கடிதம், முன்னரே சில மாவட்டச் செயலாளர்களுக்கு அனுப்பப்பட்டது. ஆனால் அந்த மா.செ.க்கள் அமைதி காத்து விட்டார்கள். இல. கணேசன் இருபத்து நான்கு மணி நேரமும் கட்சி சிந்தனையாகவே இருப்பவர். பல மாநிலங்களில் மாநிலத் தலைவர்களைவிட, கணேசனைப் போன்ற பொதுச் செயலாளர்கள்தான் செல்வாக்கு உள்ளவர்களாக இருப்பார்கள். தமிழ்நாட்டிலும் இதே நிலைதான். "இதைக் கண்டு பொறாமைப் படும் சிலரின் வேலைதான் இது போன்ற மொட்டைக் கடிதாசிகள்" என்கிறார் ஒரு பிரமுகர். மத்தியில் ஆட்சிப் பொறுப்புக்கு வந்த பின்னர் தமிழகத்தில், அதுவும் சென்னை மாவட்டத்தில் நன்கு அறிமுகமான சில பிரமுகர்கள், தொழிலதிபர்களுக்கும், கல்வி நிலையங்கள் நடத்துபவர்களுக்கும் காரியங்கள் செய்து கொடுப்பதற்காக அடிக்கடி தில்லி சென்று வருகிறார்களாம். இதன் காரணமாக, செல்போனுடனும், புது மாருதியுடனும் வலம் வருபவர்கள் எண்ணிக்கை கட்சியில் கூடுகிறதாம். You too B.J.P!



## டெல்லித் தொடர்புக் கில்லாடிகள்!

— தில்லப்பா



# இயற்கையாக ஒரு வாழ்க்கை!

வெறுமனே, பச்சைக் காய்கறிகளையும் ஒரு பிடி அவலையும் சாப்பிட்டே பத்து ஆண்டுகளுக்கு மேலாய் காலத்தை ஓட்டி வரும் மனிதரைக் கண்டிருக்கிறீர்களா? இருக்கிறார். அவர்தாம் டிட்டோனி முத்துசாமி. திருப்பூரிலுள்ள ஒரு பனியன் கம்பெனி அதிபர். ஆரம்ப காலங்களில் கம்யூனிஸ்ட் தொழிற்சங்க இயக்கங்களில் ஊறியவர். அதற்கும் முன்னர் கூடைப்பந்து விளையாட்டில் சூரர். இப்போது அறுபது வயது.

காலையில் ஒரு லிட்டர் நீர், சுக்குத் தண்ணீர், மதியம் ஒரே ஒரு இளநீர், மாலையில் பச்சைக் காய்கறிகள் (சீசனுக்கு எது விலை குறைவோ அது – கத்தரிக்காய் தவிர்த்து) இரவில் கொஞ்சம் பழ வகைகள்... என்று ஆரம்ப காலங்களில் சாப்பிட்டு வந்தவர் இப்போது அதைக் கூட ஒரே ஒருவேளை உணவாகக் குறைத்து விட்டாராம். இனி இதையே நிறுத்தி காற்றை மட்டுமே உணவாக உட்கொள்ள முயற்சி செய்வதாகக் கூறினார். ஏன் இப்படி...?

"பத்து வருடம் முன்பு எனது பேத்திக்கு ஒருவித அலர்ஜி வந்தது. அது சில உணவுகளால் வருவது என ஓர் இயற்கை வைத்தியர் கூற, அதன்படி அவளுக்கு அந்த உணவுகளைத் தவிர்த்துப் பச்சைக் காய்கறிகள் கொடுத்ததும் அவள் நோய் குணமானது. அதன் பின்புதான் எனது உணவு முறைகளையே மாற்றிக் கொண்டேன். இயற்கை உணவுகள் பற்றின புத்தகங்களைப் படித்து, அனுபவத்தால் உணர்ந்தவர்களைக் கேட்டு அப்படியே என்னை நான் அமைத்துக் கொள்ள ஆரம்பித்தேன்!" – என்பவருக்கு இதுவரை எந்த நோயும் அண்டியதில்லையாம். யோகா பயிற்சி இல்லாமல், உடற்பயிற்சிகள் இல்லாமல் உணவுக் கட்டுப்பாடு இருந்தாலே நோய் நொடிகள் அருகில் வராது என்பதற்குத் தாமே உதாரணம் என்கிறார்.

"எதை வேணா நிறுத்தலாம். மூச்சை நிறுத்த முடியுமா? மூச்சை நிறுத்தினா உயிர் உடனே போயிடும். அப்படீன்னா நமக்கு சரியான முதல் உணவு காற்றுத்தான். அதிலும் சுத்தமான காற்று. செயலை – பேச்சை வெளிப்படுத்தறதுக்கு சக்தி தேவை. அந்தச் சக்திக்கு உணவு தேவை. பேசாமலே அமைதி காத்தால்... காற்று உணவே போதாதா!" என்று கூறும் இவர் இயற்கைப் பண்ணையொன்றையும் ஆரம்பித்துள்ளார்.

'அன்னைப்பொழில்' என்று எட்டு ஏக்கரில் ஒரு இயற்கைப் பண்ணையை இயற்கை ஆய்வாளர் நம்மாழ்வார் உதவியுடன் ஆரம்பித்தாராம். உண்ணும் காய்கறிகளும் இயற்கையானதாக இருக்க வேண்டுமல்லவா? இரசாயன உரங்கள் இடாத உணவாக – இரசாயன உரத்தில் விளைந்த விதையாக இல்லாமல் உருவாக்க மூன்று வருடம் அந்த நிலத்தை அப்படியே விட்டு விட்டு, தண்ணீர் மட்டும் பாய்ச்சி, நிலத்தின் இரசாயனத் தன்மையைப் போக்கியிருக்கிறார்.

"பசித்திரு, தனித்திரு, விழித்திரு... முதல் எழுத்துக்களை எடுத்துப் பாருங்கள். 'பதவி' கிடைக்கும். வள்ளலாரின் இந்த வார்த்தையே எனக்குத் தாரக மந்திரம். எதைத் தேடுகிறாயோ அது கிடைக்கும் அதுதான் 'பதவி'. என்னுடைய உச்ச லட்சியமே 'தபோ' நிலைக்குப் போவதுதான். அதற்கே என்னைத் தயார் படுத்திக் கொண்டிருக்கிறேன்!" என்று சொல்லிச் சிரிக்கிறார்.

இயன்றவரை இந்த இயற்கை உணவு குறித்த விழிப்புணர்ச்சியை – உணவுக் கட்டுப்பாடு குறித்த விஷயத்தை அனைவருக்கும் கொண்டு செல்லப் பிரயாசைப்படும் இவர், 'சுற்றுச் சூழல்' குறித்தும் நிறைய அலசுகிறார். திருப்பூர் சாயப்பட்டறைகளின் கழிவுகள் பாதிப்பின் பின்னணியில் தாமும் ஒரு பனியன் தொழில் அதிபராய் இருப்பதால் இயற்கைச் சாயம் தயாரிப்பு குறித்த ஆய்விலும் முழு முயற்சி எடுத்து வருகிறார்.

இத்தனை இயற்கை விஷயங்களை உள்ளடக்கின மனிதர், ஒன்றில் மட்டும் விதிவிலக்கு. அதுதான் இவரது சுசுகி வாகனம்.

"என்ன சார் செய்வது? முன்பு குதிரையில்தான் போவேன். ஆனா இப்ப திருப்பூரில் போக்குவரத்து நெரிசல். தொழிலும் பனியன் தொழில். அதனால்தான் இது!" என்கிறார். ●

சந்திப்பு, படம் : **கேயெஸ்வி**



# கண்ணெதிரே தோன்றினாள்

**மாற்றம் அல்ல**

'காதலுக்குக் காதல்; அதே சமயம் காதலுக்காக உற்றாரிடம் வேண்டாம் மோதல்' என்று படமெடுத்தால் எல்லா வயதினரையும் கவர்ந்து விடலாம் என்ற 'மரியாதை'யான டெக்னிக்தான் இதிலும்.

**மாற்றம்!**

முதலில் மோதல்; பிறகு நெருக்கம் என்று தொடர்கிறது - நாயக நாயகியின் காதல் அல்ல! பிரசாந்த் - கரணின் நட்பு. காதலை விட நட்பு பெரிது என்பதைக் கனிவாகச் சொல்லியிருக்கிறார் இயக்குனர் ரவிச்சந்திரன்.

**மாறி மாறி**

நண்பன் கரணின் தங்கை சிம்ரன் என்பது தெரியாமலேயே அவரைக் காதலிக்கிறார் பிரசாந்த். 'வேறொரு நண்பன் தனது மூத்த தங்கை இந்துவைத் திருமணம் செய்து கொண்டதால் தன் குடும்பத்துக்கு ஏற்பட்ட பாதிப்புகளை' பிரசாந்திடம் கூறும் கரண், 'அவன் என் நட்புக்கு துரோகம் செய்துட்டான்' என்று கடந்த காலத்தைக் கூறிக் கதறுகிறார். தேள் கொட்டிய திருடனாய் பிரசாந்த் தன் காதலை மனதிலேயே கோத்ரெஜ் பூட்டு போட்டு மூடி வைத்துக் கொள்கிறார் - காதல் போகட்டும்; நண்பன் புண்படக் கூடாது என்று. இறுதியில் தற்செயலாக உண்மை வெளிப்பட, தியாகி பிரசாந்த்தை மனப்பூர்வமாகத் தங்கைக்கு மணம் முடிக்கிறார் கரண்.

**மாற்றம் கொஞ்சம் தேவை**

சோகம், பரிதாபம், குழப்பம் போன்ற உணர்வுகளை பிரசாந்த்தால் துல்லியமாக வெளிப் படுத்த முடிகிறது. என்றாலும் காதல் காட்சிகளில் மட்டும் முதுகில் ஏதோ எறும்பு ஊர்வதைப் போன்ற பாவம்.

**மாற்றமோ மாற்றம்**

சிம்ரனுக்கு சீரான, கௌரவமான பாத்திரம் என்று அறிந்தால் ஆச்சரியப்படுபவர்கள், அதை அவர் அழகாக அண்டர்ப்ளே செய்து கையாண்டிருப்பதை அறிந்து மேலும் வியப்படைவீர்களாக. முக்கியதொரு ரோலில் - முக்கியமாக, கடைசிக் காட்சிகளில் - கரண் மின்னுகிறார்.

**மாற்றம் – உடனடித் தேவை**

பாடல் காட்சிகளில் காதுக்கு நேரும் பெரும் சித்ரவதையை (தேவா) ஈடுசெய்வது கண்ணுக்கு அளிக்கப்படும் விருந்துதான் (தங்கர்பச்சான்). தே. தென்றலே, உங்கள் ஒவ்வொரு படத்திலும் ஒரே மாதிரியான ஒரு பாட்டை (இதில் இரண்டு!) நீங்களே பாடித் தீருவது என்ற பிடிவாதத்தைத் தளர்த்துங்களேன். ப்ளீஸ்!

**மாற்றம் வாழ்க!**

வழக்கத்திலிருந்து விலக வேண்டும்; அதே சமயம் சத்தான கதையை சாமர்த்தியமாக அளிக்க வேண்டும் என்று இப்போது புறப்பட்டிருக்கும் புது ரத்தங்கள் பல்கிப் பெருகட்டும்.

— ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

